ௐ

*"Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*

*Seek Truth wherever you can find it, But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்யம்வத.—**Speak the Truth.**

**"Hitch your Wagon to a Star."** **"To Thine Own Self be True."**




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] ௐ [God is Love : Knowledge is Power : *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் 14.] 1906-ம்ஹூ ஜனவரிமீ. [சஞ்சிகை 9.

# BIO-PHYSIOLOGY.

## "Matter, Motion and Rest."

### Their true Nature and Relation.

"Character is higher than intellect .....A great soul will be strong to live as well as to think."—*Emerson.*

According to *F. Engels*, "*Motion is the mode of existence of Matter.*" *Büchner* (in "Matter and Motion") says: "*Never and nowhere* has there been *matter without motion.*"

"We have all been taught and have probably had no misgivings in saying that matter is indestructible. Much philosophy is founded on that proposition. But we are now confronted with the well vouched for phenomenon from two independent workers that under certain conditions a certain mass of matter loses weight, not by chemical removal of some of its molecules, but by the physical changes which take place in it. This is a piece of news that is almost enough to paralyse a scientifically minded man, for stability of atoms, unchanging quantity and quality, seems to be at the basis of logical thinking on almost all matters.......The amount of change is slight in the experiments related, yet well within the possibility of measuring......If it be proved (finally to stand further tests), it will be the most stunning fact that has come into science for a hundred years. The nebular theory, the doctrine of evolution, and the antiquity of man will be trifles compared with its significance."—*Science Siftings* on "Chemistry and the atomic theory on which it is based."

"The study of the visible Universe shows that it is composed of ascending series of similar systems. For example: (1) *atoms* appear to be spheroidal "star-clusters" of still smaller particles in motion; (2) *suns* and *worlds* are rotating spheroids built up of these atoms; (3) *stellar systems* are rotating spheroids built up of suns and worlds; (4) the visible *Universe* appears to be a rotating spheroid built up of a Milky Way af stellar systems. It is possible that this largest spheroid, which we call the Universe, may be only one out of innumerable similar spheroids rotating at practically infinite distances from each other and forming a still vaster rotating spheroid......

"It is an amazing thought that any lump of matter we take into our hands may be a tiny replica of the Universe, not dark, silent, and solid, as we have hitherto imagined, but composed of an infinite number of atomic star-clusters, revolving in a space which, relatively to their size, is as immense as the heavens, and displaying the whole pageant of sun-lit skies or star-lit nights, to beings with faculties on the same scale, if haply they existed to receive the impression. Thus what the astronomer is doing in his observatory may be an analogous task to that which the chemist or physicist is pursuing in his laboratory, when he investigates the nature of the atom and its electrified corpuscles; and the immeasurable spheroid of the universe as it seems to us may to another being constructed on a different scale be no bigger than a pebble that we pick from the sea shore."—*Astronomical Notes in the P. B.*

"To him who believes in immortality, death is a jar—a break—a deep, mysterious change, but not the end of life. See how free it makes him. How it breaks his tyrannies. He can undertake works of self-culture or the development of truth, far, far too vast for the earthly life of any Methuselah to finish, and yet smile calmly and work on when men tell him he will die before his work is done. Die! shall not the sculptor sleep a hundred times before the statue he begins to-day is finished, and wake a hundred times more ready for his work, bringing to it with a hundred new mornings the strength and visions that have come to him in slumber?"—*Phillips Brooks.*

"I AM IMMORTAL UNTIL MY WORK IS DONE!" AND WHEN IT IS WELL AND TRULY DONE AND FINISHED, "I BECOME IMMORTALITY ITSELF."

"By the attainment of perfect wisdom Virtue and the rest become devoid of causal energy; yet the Spirit remains awhile invested with body, as a potter's wheel continues to revolve by the force of the impulse previously imparted to it."—*Tattva Kaumudi.*

"The emancipated Spirit thus invested with body, but without any attachment to it, lives a calm and serene life; and as Nature has now accomplished her self-imposed task of gathering *experience* for the Spirit through enjoyment, and leading it to *the perception of Truth* through DISCRIMINATIVE WISDOM, both *Purusha* and *Prakriti* retire from the World and cease their *Lila.* "She has been seen by me" says the one and so retires; "I have been seen" says the other and ceases to act. Hence though there is still their conjunction it affords no motive towards further creation —says *Vachaspati Misra.* "So let us salute the mutually satisfied couple, whose life-story so imperfectly related has yet charmed us" whispers a charming *Voice* whose ethereal form in glory clothed, has evidently been hovering about unnoticed. Now I recongnise it. All hail to thee! Good Spirit! I thank thee for that cheering voice and smiling face.........

"Now, gentle and patient Reader! my task is done; and thine begins where mine doth end. Perchance thou art tired to disgust! Perchance thou art stirred to the depth of thy soul! If the latter, go not again to sleep. Know that "Nature is the vehicle of thought;" Know that "(1) Words are signs of natural facts; (2) Particular natural facts are symbols of particular spiritual facts; and (3) Nature is the symbol of Spirit." Take this key and use it well to unlock the door that keeps the "secret" of the story of *Lotus et Rosa, i.e.,* of *Purusha* and *Prakriti.*"—*From Gleanings on the Way.*

The products "seven" in Primal Energy merge;
The producers "seven" as the Light of Heaven emerge;
When at last the subtle relation of Cause and Effect cease,
Lo! Thy Reward! A' UNIVERSE ALL FULL OF PEACE!—*Tirumoolar Tirumantram.*

## BIO-PHYSIOLOGY.

# உடலுயிருண்மை விளக்கம்.

### I. உடல்-உயிர்-உறவு.

—(+)—

பூதமொடு பழகிவளரிந்திரியமாம் பேய்கள் - புந்தி முதலான பேய்கள்
போராடு கோபாதி ராக்ஷஸப்பேய்களென் - போதத்தை யூடழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேதவஞ்சன் - விதித்தானிவ்வல்லலெல்லாம்
வீழும்படிக்குனது மௌனமந்த்ராதிக்ய - வித்தையை வியந்தருள்வையோ
நாதவடிவாகியமஹா மந்த்ரா திரூபியே - நாதாந்தவெட்டவெளியே
நற்சமயமானபயிர் தழையவருமேகமே - ஞானவானந்தமயிலே
வாதமிடுபரசமயம் யாவுக்குமுணர்வறிய - மகிமைபெறு பெரியபொருளே
வரைராசனுக்கிருகண் மணியாயுதித்தமலை - வளர்காதலிப்பெண்ணுமையே.

—தாயுமானவர்.

"நாதமுடிவுலே நல்லாளிருப்பது
நாதமுடிவிலே நல்யோகமிருப்பது
நாதமுடிவிலே நாட்டமிருப்பது
நாதமுடிவிலே நஞ்சுண்டகண்டனே."

—திருமந்திரம்.

"பெறுதற்கரிய பிறவியைப்பெற்றும்
பெறுதற்கரிய பிரானடிபேணார்
பெறுதற்கரிய பிராணிகளெல்லாம்
பெறுதற்கரியதோர் பேரிழந்தாரே."

—திருமந்திரம்.

"கருக்கலந்த காலமே கண்டிருந்தகாரணா
உருக்கலந்தபோதலோ வுன்னைநானறிந்தனன்
திருக்கலந்த சோதியைத்தெளிந்து நானறிந்தபின்
இருக்கிலேனிறக்கிலே னிரண்டுமற்றிருந்ததே."—சிவவாக்கியர்.

"மவுனமான வைந்தெழுத்தை வாசியேறிமெல்லவே
வானெலா நிறைந்தசோதி மண்டலம் புகுந்தபின்
அவனுநானுமெய்கலந்தே யனுபவிக்குமளவிலே
அவனுமில்லை நானுமில்லை யாருமில்லையானதே."—சிவவாக்கியர்.

"மண்ணாகி விண்ணாகி மலையுமாகி வயிரமுமாய் மாணிக்கந்தானேயாகிக்
கண்ணாகிக் கண்ணுக்கோர்மணியுமாகிக் கலையாகிக்கலைஞானந்தானேயாகிப்
பெண்ணாகிப் பெண்ணுக்கோராணுமாகிப் பிரளயத்துக்கப்பாலோரண்டமாகி
யெண்ணாகி யெண்ணுக்கோரெழுத்துமாகி யெழுஞ்சுடராயெம்மடிகள் நின்ற
வாறே."—தேவாரம்.

"தற்பதத்தார் நற்பதமே ஞானமூர்த்தி நலஞ்சுடரே நால்வேதத்தப்பால்நின்ற
சொற்பதத்தார் சொற்பதமுங்கடந்துநின்ற சொலற்கரிய † சூழலாயதுவுன்றன்மை

† சொல்லுக்கெட்டாத சூக்ஷமமுடையது உன் ஸ்வரூபம்.

நிற்பதொத்துநிலையிலாநெஞ்சந்தன்னுள்நில்லாதபுலாலுடம்பேபுகுந்துநின்ற
கற்பகமேயானுன்னை விடுவேனல்லேன் கனகமாமணிநிறத்தெங்கடவுளானே.''
—தேவாரம்.

"களங்கமற்ற கண்ணாடி தன்முன் வேறோர் களங்கமற்ற கண்ணாடி காட்டும்போது
விளங்கியதன்மயமாகி அபேதமாகி விகற்பமன்றி நிருவிகற்பமானாற்போல
அளந்தறியப்படாவிபுவாய்ச்சத்தாய்ச் சித்தாய் ஆனந்தமாம் பிரமத்தைக்யமான
உளந்தெளிந்தபடியிருந்தாலுலகமெங்கே யுலைவெங்கே யென்று சங்கை
யொழித்திடாயே.''—கைவல்யநவநீதம்.

உடலுயிர் என்பவற்றில் உடல் எது? உயிர் எது? இதைப்பிரித்தறிந்தார் யார்? உடலையுள்ளபடி கள்ளமின்றி யறிந்தார் உயிரறிந்தார்; உயிரையுமப்படியே யுள்ளபடி கள்ளமின்றி யறிந்தார் உடலறிந்தார். "உடலைக்கொண்டு உயிரை யறிவோமா? உயிரைக்கொண்டு உடலையறிவோமா?" என்பது பெரும்பாலாருக்கும் ஒரு பெரிய யோசனை. முதலெடுப்பிலெழுந்த இந்த சந்தேகம் நீங்குமுன் தந்தேகப் போய்விடுகிறது! பின்னு முடல் தேடியலைகிறார்கள்! இப்படிப் பிறப்புமிறப்பும் நினைப்புமறப்பும்போல் சகடக்காலாகச் சுழன்று வர, ஜீவன்கள், பாவம்! அதிலொட்டிய தூசிபோல் தலைகீழாகவும் கீழ்மேலாகவும் கெட்டலைந்து சுற்றிச்சுழன்று வருகிறார்கள். பிறந்தால் உண்டுடுத்துறங்குவதும், இறந்தால் தன்னை மறந்து பின்னும் உடல் தேடித்திரிவதுமாகவிருக்கிறது! ஆகையால் "பெறுதற்கரிய பிறவி"யாம் இம்மானுடப் பிறவியைப் பெற்றவர்கள் "தான் யார்? எங்கிருந்து வந்தது? எங்கேபோவது? என்னத்திற்காகப் பிறந்தது?" என்கிற கேள்விகளுக்கு பதில் சொலத்தெரியாமல் விசாரந்தலைக்கேறி அழுவதும் சிரிப்பதுமாகவிருந்து காலத்தைத் தள்ளிக் கடைசியில் போம்போது ஒன்றுந்தெரியாமல் கண்ணைக்கட்டிக் காட்டில் விட்டதுபோல் இருள்வெளியில் போயடையப்பயந்து அழுதுக்கொண்டு போகிறார்கள். தீராதிதீரனும் ஞானதிசூரனுமாகிய பட்டணத்துப்பிள்ளை,—

"வஞ்சகமன் வாதனைக்கும் வன்பிறவி வேதனைக்கும்
அஞ்சியுனையடைந்தேன் ஐயா பராபரமே!''

என்கிறார். இப்பூமண்டலத்திற் பிறந்தவர்களில் எமனுக்குப் பயப்படாதவர் ஒருவருமில்லை. மார்க்கண்டேயருங்கூட தனக்குக் குறித்த வயது 16-ம் ஆய்விட்டதென்று பெற்றோர் விபசனமுற்றலறியதைப் பொறுக்காமல், "நீங்களேன் துன்புறுகிறீர்கள்! காலனை வெல்லும் காலகாலன் ஒருவரிருக்கிறார். அவரை யடிபணிந்தால் காலன் எப்படி யணுகுவான்? காலனையும் வெல்ல வழியுண்டு காட்டுகிறேன் பாருங்கள்!' என்று சொல்லிச் சிவபூஜை செய்யச் சென்றார். அருளைக்கொண்டு இருளை வெல்லலாம், மதியைக்கொண்டு விதியையும் வெல்லலாமென்பதைக் காட்டிய மஹாதீரர் இவர். இப்படி நம்மில் மேலோர்கள் அனேகம் பேர்கள் காலனைவென்று கடைத்தேறி யிருக்க, அவர்கள் வழியைப் பின்பற்றி நாமும் கடைத்தேறலாமென்றால் "காலம் கெட்டுக்கிடக்கிறது"-"காலம் கலிகாலம்" என்கிறார்கள். காலம் எப்போதும் (கலி) இருப்பாகவேதானிருக்கும். அதை வெல்ல யாராலும் முடியாது. ஆனால் இரும்பையும் பொன்னாக்கும் ரஸவாத வித்தை யொன்றுண்டு. அதை யுளவறிந்

துணர்ந்து கையாண்டால், இரும்பான கலத்தையும் பொன் வெள்ளியொத்த தூலமாக்கி விடலாம். இதற்குத் தெரியவேண்டிய இரகசியம் ஒன்றேயொன்று! அந்த ஒரு இரகசியம் மட்டும் தெரிந்துவிட்டால் கலியுகத்தையும் கிரேதாயுகம் திரேதாயுகமாக மாற்றி விடலாம். அந்தப் பரம இரகசியந்தான் என்னவென்றாலோ, பிரமாதமொன்றுமில்லை, இதுதான்: "உடல்-உயிர்" இவற்றின் உறவு என்ன? உடலிலிருந்து உயிர் உண்டாயிற்று? உயிரிலிருந்து உடல் உண்டாயிற்று? இந்த சின்னக்கேள்விதான் திருப்பித் திருப்பியும் கோடி கிரந்தங்களில் மாற்றி மாற்றித் தர்க்கிக்கப்படுகின்றது!

வித்திலிருந்து மரமுண்டாயிற்று? மரத்திலிருந்து வித்துண்டாயிற்று? "வித்தில்லாமல் மரமில்லை, மரமில்லாமல் வித்தில்லை," யென்பதொன்று மட்டும் ஸ்பஷ்டமாகத் தெரியும். ஆனால் முதல் முதல் வித்திலிருந்து மரமுண்டாயிற்று, மரத்திலிருந்து வித்துண்டாயிற்று? இவ்விரண்டில் எது ஆகியோ அது எப்படி உண்டாயிற்று? இந்தச் சின்னக்கேள்விக்கு மறுமொழி சொல்லத்தான் உலகமுண்டான காலமுதல் மனுஷன் பிரயத்தனப்படுகிறான். எத்தனையோ மஹான்கள் இக்கேள்விக்குச் சரியான உத்தரம் கண்டுபிடித்துக் கடைத்தேறியிருக்கிறார்கள். இன்னுமெத்தனையோ கோடிஜனங்கள் இன்னும் இக்கேள்வியையே கேட்டுக்கொண்டு பதில் அகப்படாமல் கிடந்து விழிக்கிறார்கள். அடே! உடலும் உயிரும் என்ன உறவாயிருந்தால் நமக்கென்ன! நம் காரியத்தை நாம் பார்ப்போமே யென்றால், நமக்குள்ள எல்லாக்காரியமும் உடலுயிர் இரண்டும் பிரியாமற் காப்பதைத் தவிர வேறொன்றுமில்லை. உடல் என்றால் இன்னதென்று தெரியாது; உயிர் என்றால் இன்னதென்றும் தெரியாது. இப்படி தாகலா-மோகலாத் தெரியாத இரண்டு பேர்களைச்சொல்லி மொட்டைத்தலைக்கும்முழங்காலுக்கும் முடிபோட்டதுபோல் இவையிரண்டையும் ஒன்றாய் முடிந்துபோட்டு "அடே! இம்முடிச்சவிழ்ந்து போகாமற் பார்த்துக்கொள்! அவிழ்ந்ததே வந்தது நாசம் உனக்கு!" என்று கண்டனை தண்டனைசெய்து பாராவிருக்கச் சொன்னால் இந்தச்சல்லிய வேலையை யெப்படிச்செய்து முடிக்கிறது! "மண்ணாகி விண்ணாகி மலையுமாகி" என்கிற தேவாரப்படி எல்லாவற்றிலும் உயிர் இருக்கிறது; உயிரில்லாததாகத்தோன்றும் ஜடப்பொருள்களிலும் உயிரிருக்கிறது! நமது ஊனக்கண்ணுக்குப் புலப்படவில்லையென்று நாமில்லையென்று நம்பியிருந்தால் திடீரென்று ஒரு 'பூகம்பம்' உண்டாகி நாடுநகரையெல்லாமழித்து மனிதனை எட்டுக்காற்பூச்சி ஈ பிடிப்பதுபோல் பிடித்து விழுங்கிவிடுகிறது. காற்றிலென்ன விருக்கிறது அதற்கு உருவமா உடம்பாவென் றசட்டைபண்ணினால் ஒரு சண்டமாருத மடிக்கிறது! மரஞ்செடிகளெல்லாம் ஆடிக்காற்றில் எச்சிற்கலை பறப்பதுபோல் எங்கும் பறக்கிறது! உடனே யொரு சுழல்காற்றடிக்கிறது! கூறை கொத்தளங்களெல்லாம் அடியோடு பிடுங்கி யெறிந்து விடுகிறது! ஏதோ மனுஷனுக்குத் தெரிந்தவரையில் இவைகளுக்கஞ்சி பந்தோபஸ்தா யிருப்போமென்றால், ஒரு பெருவாரிக் காய்ச்சல் வருகிறது ஊரிலுள்ள ஜனங்களையெல்லாம் சின்னஞ் சிறியரென்றும் கிழங்கட்டையென்றும் தாரதம்மியம் பார்க்காமல் ஒன்றாக வாயில் போட்டுக்கொண்டு போய்விடுகிறது! உடல் படும்பாட்டைச் சொல்லவோ! உயிர் போகும்போக்கைச் சொல்லவோ!

இப்படி மனிதன் தன் சிற்றறிவுக்கெட்டிய அளவிற்கு எவ்வளவு புத்தி யுக்தியோடு உடலுயிர் இரண்டும் இணை பிரியாமலிருக்கவேண்டுமென்று பிரயத்தனம் செய்தாலும்,

இவன் புத்தி யுக்திக்கு எட்டாத ஒரு நோவோ, நொடியோ காற்றோ மழையோ, வெள்ளமோ, பஞ்சமோ, காய்ச்சலோ பேதியோ என்னவோ ஒன்று வந்து இவனை ஏமாற்றிவிட்டுப்போய்விடுகிறது! மனிதன் வெகு பாடுபட்டுக் கட்டுகிறதையெல்லாம் அவனறியாத ஒரு சக்தி அவனுக்குத் தெரிந்துந் தெரியாமலிடித்துத் தகர்த்துத் தரைமட்டமாக நிரவிவிட்டுப்போகிறது. இப்படி மனிதனுக்கு ஓயாப்பகையாக விருக்குமொன்றைக்காலன் என்கிறார்கள். காலன் என்றாலென்ன? காலத்தை உருவகப்படுத்திச் சொல்லிய வொன்றுதானே! அந்தக்காலம்தான் என்னவென்று பார்த்தால், அது தன்னுள் பார்த்துக்கொண்டால் மூச்சுக்காற்று தயிர்கடைகிற மாதிரியாக உள்ளும் வெளியும் போய் வருகிறதாகவும், வெளியில் பார்த்தால் சந்திர சூரியர்களின் ஓட்டமென்றும், பூமி தட்டாமாலை சுற்றுவதுபோல் தன்னைத்தானே சுற்றிக்கொண்டு சூரியனைச் சுற்றியோடுகிறதென்றும் தெரிகிறது! இந்த அசைவுதான் என்ன? ஏன் இந்த ஓட்டம்? என்று பார்த்தால் மேலொன்றும் தோன்றவில்லை. அப்பவும் சடம் சக்தியென்று இரண்டு இருக்கிறது. இவையிரண்டும் சேர்ந்தால் சுற்றிக்கொண்டே அலைவது சுபாவம் என்று தெரிகிறது. சடம்-சக்தி என்றால் என்ன? இரண்டும் ஒன்றுதான்! உடல் எது?-உயிர் எது? இவ்விரண்டிற்குமுள்ள உறவு என்ன? என்கிற கேள்விக்கு பதில்கிடைக்கவில்லை.

பூமியை ஆராய்ந்து பார்த்தவன் வானத்தைப்பார்த்து சூரியன் சந்திரன் நக்ஷத்திரங்கள் இவற்றின் உருவம், ஓட்டம், பருமன் ஒன்றுக்கொன்றுள்ள சம்பந்தம் இதையெல்லாம் வெகுசாமர்த்தியமாகவும், அதிபுத்தியுக்தியோடும் கண்டுபிடிக்கிறான்! அடே! இவ்வளவு கண்டு பிடித்தாயே! உடல்-உயிர் அல்லது சடம்-சித், அல்லது சத்-அசத் இவற்றின் தன்மையையும் உறவையும் கண்டு பிடித்தையாவென்றால் "அதையேன் கேட்கிறாய்! அது மனிதனால் ஆகிற காரியமா என்ன? ஆகும்படியானதாயிருந்தால் அதற்குத்திரம் எனக்குத் தெரிந்திருக்காதா? அதைப்பற்றிப் பேசுகிற நீ வேலையற்றவம்பன்" என்று நம்மையே திட்டுகிறான். நம்மைத் திட்டிவிட்டு வானசாஸ்திரம் பயிலும் உற்சாகத்தில் ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டே யிருக்கிறான்! அப்படியே ஒரு கொட்டாவிவிட்டுப்பிராணன்போய்ப் பிணமாய்விடுகிறான்! அடே பிராணன் தானடா உயிர்; பிணமாய் விழுந்த தேகம் தானடா உடல் என்றால்; பிணம் அசையாமலிருக்க வேணும், பிராணன் காற்றாக அலையவேண்டும்! பிணமோ கைகாலசையாவிட்டாலும் நாழிக்கு நாழி அக்கக்காகப் பிரிந்து கொண்டிருக்கிறது. நாலுமணியாய் விட்டால் நாற்றமெடுத்து விடுகிறது. உயிரோ போனதா வந்ததா ஒன்றும் தெரியவில்லை! அக்கக்காகப்போகும் பிணத்தையுமெடுத்து நான் சோதித்துப்பார்க்கிறேன் என்று ஒருவன் துணிகிறான்! அதைக் காக்கை கழுகு பிடுங்குகிறாப்போல் பிடுங்கிப்பார்த்துக் கடைசியில் இது ஒருபெரிய அணுக்கூட்டம் என்கிறான். அந்த அணுவில் பிராணன் இல்லையா? அது கூடிக்குறையாமல் அப்படியே நிலையாக விருக்கிறதா? என்று கேட்டால் ஒரு மேதாவி நாம் பார்த்தமட்டில் அது மாறக்காணோம் என்கிறான். இவனிலும் மேதாவியொருவன் இவனுக்குமேல் பரீக்ஷித்துப் பார்த்து "அப்பா அப்படி துணிவாகச் சொல்லிவிடாதே! இந்த அணுவையெடுத்துப் பரிசோதித்துப் பார்த்தால் அதில் நக்ஷத்திர மண்டலம்போல் அனேக சூரிய மண்டலங்களிருக்கத் தெரிகிறது பார்" என்கிறான்! அப்படியா! என்று பிரமித்துப் பார்க்கிறான்! இவனுடைய அணுப்பிரமாணவாதம் அடியற்ற மரம்போல் விழுந்து கிடக்கிறது. இப்படி அண்டத்தை ஆராய்ந்தால் அது அணுமயமா

யிருக்கிறது. அணுவை யெடுத்தாராய்ந்தால் அது அண்டாண்டங்கள் நிறைந்ததாகவிருக்கிறது. அணுவிலிருந்து அண்டமுண்டாயிற்றா? அண்டத்திலிருந்து அணுப்பிறந்ததா? சுற்றிச் சுற்றியும் பீஜாங்குர நியாயத்தில்தான் வந்து முடிகிறது!

சீ! விடு! இந்த விஞ்ஞான கலைஞானங்களெல்லாம் "ஒன்றும் ஒன்றும் என்ன?" என்றால் "மூன்று, நான்கு,..." என்று மேலே மேலே எண்ணிக்கொண்டு போகிறதாகவிருக்கிறது! அட! "ஒன்றும் ஒன்றும் என்ன? இரண்டா? ஒன்றா?" என்றால், சரியான பதில் இல்லை. "இரண்டு என்று சொன்னாலும் அனர்த்தம் வருகிறது! இல்லை ஒன்றுதான் என்று சொன்னாலும் அனர்த்தம் விளைகிறது! ஆகலால் உடல் என்றால் என்ன, உயிர் என்றால் என்ன, சொல்! அப்புறம் நான் 'உடலுயிர்' ஒன்றா இரண்டா சொல்கிறேன்" என்கிறான். சரி! நாம் கேட்ட கேள்வியையேதான் திருப்பிக் கேட்பதாகவிருக்கிறது! இந்த மேதாவிகளையெல்லாம் வழிபட்டும் நமதுகுறை தீர்வதாயில்லை. ஆனால் இதற்கு வேறு வழிதான் என்ன? அந்த விசாரம் வேண்டாமென்றாலும் அது நம்மை விடுவதாகவில்லை! சாப்பிட்டுக்கொண்டிருக்கையிலே தொண்டை விக்கிக்கொண்டு மாரடைக்கிறது! கூ! கூ! வென்று கத்துகிறோம்! அதைப்பற்றி விசாரித்துப் பார்ப்போமென்று புறப்பட்டாலோ உலகத்திலுள்ள விஞ்ஞான கலைஞான புருஷர்களெல்லாம், கல்லு முள்ளும் தைக்கக் காடுசெடியெல்லாம் நம்மைப் போட்டிழுத்துக்கொண்டுபோய், கடைசியில் நாம் கேட்ட கேள்விக்கு பதில் சொல்லாமல் அதையே வேறுவிதமாக மடக்கியும் மாற்றியும் நம்மைக் கேட்கிறார்கள். ஆகையால் இவர்களைக்கேட்டும் பிரயோஜனமில்லை! வேறுவழி தோன்றாமல் விசாரம் பிடுங்கித்தின்ன இதுவே சிந்தையா யுட்கார்ந்திருக்க, உடல் மறந்த நித்திரையில் விழுந்தது ஒன்றுதான் தெரியும்

அன்பு முளைத்தல்-First Perception of the Principle of Love.

"உட்கார்ந்த வேளையிலே உடல் மறந்த நித்ரையிலே
ஆனந்தத் தோட்டமதில் ஒரு அருமுளையைக் கண்டுவிட்டேன்;
கண்டு விட்ட முளையதுவைக் கண்கொட்டாதுற்று நோக்கி
களைப்பிளைப்பு நீங்கிக் கனவு நனவும் நீங்கி
ஆறியமர்ந்து அறிவாலே பார்த்திருந்தேன்;
கோணல் முளையதுவும் கொம்புபோல் நீண்டதுகாண்
நீண்டமுளை பின்னர்க் கிளைவிட்டுப் பிரிந்ததுகாண்
பிரிந்த கிளைகளவை யிலைவிட்டுத் தழைத்தனவே
தழைகளதிகரிக்கத் தளிர்கள் மிகக் கிளம்பினவே
தளிர்கள் மிகத் துளிர்க்கக் கப்புக் கிளைகள் கண்டேன்
இத்தனையும் செழித்தோங்க ஏகாந்தமாய் வளர்ந்ததுவே!
சின்னச்செடியாச்சு சிறப்பான மரமாச்சு:
காயில்லை யென்று சொல்லிக் கைபிசைந்து நானழுதேன்.

ஆறுதல் கூறல்—Encouraging Words.

"பூக்கும் பருவமென்றாள் பிஞ்சுவிடும் காலமென்றாள்
அல்லு பகலும் அன்பான நீர் வார்த்து

ஆதரவு செய்து அருமையாய் வளர்த்து வந்தால்
இன்பக்கனியின்று மிது நிச்சயம் நிச்சயமென்றாள்
அம்மாளுரைத்ததுவை அன்பாலே நம்பினேன் நான்."

* * * *

போதும்! இதென்ன அதிர்சயம்! அன்பு முளைக்கவாவது! அன்பான நீராவது! அம்மாளுரைக்கவாவது! அன்பாலே நம்பவாவது! 'அன்பு என்றாலென்ன? இதையறிந்து கொண்டால் நாம் தேடியலைகிற மர்மந்தெரியுமோ பார்ப்போம்! என்று ஒரு உள்ளுறுதி தோன்றிற்று!

நாம் அலைந்து திரிந்ததென்ன! "எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி மனம் புண்ணாகி" மண்ணாதி விண்ணிலும் மர்மத்தை யுணரமாட்டாமல் அதே சிந்தனையாக அயர்ந்து நித்ரை போனதென்ன! அந்த நித்ரையில் இத்தனை காக்ஷிகளும் வார்த்தைகளும் கூத்துகளும் கண்டதென்ன! அந்த நித்ரையில் கண்டதார்? கேட்டதார்? அழுததார்? ஆறுதல் கூறினதுந்தான் யார்? இது என்ன! எப்போதுமில்லா அற்புதக் கூத்தாக விருக்கிறதே! கண்களோ அயர்ந்து நித்ரை போயின! காதுகளோ அடைத்துக் கிடந்தன! கைகால்களோ அசைவற்றிருந்தன! இப்படி உடலும் உறுப்புகளும் அசைவற்றிருக்கையில் கண்டதும் கேட்டதும் யார்? எதிரேவந்து ஆறுதல் கூறியதும் தான் யாரோ? ஓஹோ இதில் ஏதோ மர்மமிருக்கிறது என்று மனதிற்குள் நிதானித்துக்கொண்டு இந்தச் சந்தேகத்தை விளக்க வல்லவர் யாரென்று தேடியலைந்தேன். அப்படி யலைந்தபொழுது நான் கண்டது கனவோ நனவோ அல்லது "கனவு நனவற்ற"தோர் காக்ஷியோ அறியேன்! ஆனால் நான் கண்டதுமட்டும் ஸத்யம், அதில் சந்தேகமில்லை. என்னத்தைக் கண்டேன் என்றால்,—

ஆனந்தப்பரதேசிக்காட்சி–குருமூர்த்தம்—The Vision of the Holy Spirit as Teacher.

"ஓராமோரூரிலே ஒப்பற்ற சாலையிலே
ஏகாந்த வீதியிலே யாருமற்ற வீடதிலே
மூன்றுபடி யேறிச்செல்லும் முதலான மாடியிலே
யாருமறியாமல் அம்பரமே கதியாக
வேலையற்ற பரதேசி வீற்றிருக்க நான் கண்டேன்."

உருக்காட்டி யுருவழித்தல்—The Formless assuming form to Teach.

"கண்டவளைக்காண விருப்புற்றேன் வனாவிலவள்கிட்டப்போகலுற்றேன்
கையைக் கையைக் காட்டிக் கலகமிகச் செய்துவிட்டேன்
வன்பு துன்பு செய்தேன் வீண்வாதம் பலசெய்தேன்
சும்மா இருந்த அவள் சிக்கெனவே கைப்பிடித்து
என்னைமடக்கிக் கொண்டாள் எட்டி யெட்டி யவளுதைத்தாள்
அடித்தாளவள் கைப்பிடித்து என்னங்கமெல்லாம் நோவெடுக்க
உதைத்தாளவள் கைப்பிடித்து என்னுள்ள முடைந்திடவே;
உள்ள முடைந்திடவு மெதிர்த்துக்கொண்டேன் நானவளை:

கைப்பிடித்து என்னை அடித்து உதைத்தனையே
உள்ளமுடைந்ததுவே உடலுமழிந்ததுவே
இன்னமுமுன்கைப்பிடியில் எத்தனைநாள்சிக்கிநிற்பேன்
என்றுசொல்லியுறம்பேசியவளைமடிபிடித்திழுத்துவிட்டேன்;
மடிபிடித்துவழக்குதனைத்தீர்த்திடவே சண்டையிட்டேன்;
சண்டையிட்டகாலைநான்ஜயமுடனே வந்துவிட்டேன்;
வந்துவிட்டேனானாலுமவள் வலிமறவேனொருநாளும்.''

போதசக்தி - குடிமயக்கம் — The Power of Grace.

''பார்த்தால்பரதேசி பெருங்குடியளவளறிவாய்
அவள்குடிமயக்கமறியாமலகப்பட்டேனவள்கையில்;
மடியைப்பிடித்துநான் மாக்ஷிபெற்றுவருமுன்னே
அந்தக்குடிமயக்க மென்னையுமேபிடித்ததுகாண்
மயக்கம்பிடித்தாலும் மையையது நீங்கியது
நான்பிறந்தநாள்தொட்டு என்னைப்பிடித்த இவ்வியாதி
நீங்கியதேபெரிதாச்சு இனிநித்தியசுகம் நான்பெறுவேன்.
நானென்னென்ன சொல்லிப் பிதற்றினேனானாலும்
குடிகாரனானேனென்று குடித்தினத்தாரிகழ்ந்திடுவார்

ஆனபடியால், ''அதைத்தான் நீ சொல்வானேன் உன் வாய்தான் நோவானேன்''
என்றுரைத்தான் சொற்கேட்டு இருந்திடுவேன் சும்மா நான்.

அம்மாளே துணை ! அம்பரமே கதி.

இதென்னடா அது! அன்பு என்னவென்று தேடப்புறப்பட்டால் யாரோ ஆனந்தப்பரதேசியாம், அவள் அடித்தாளாம் உதைத்தாளாம், உடலுமழிந்ததாம், உள்ளமுமுடைந்ததாம்? உள்ளமும் உடலும் போனபின் அவளையெதிர்த்துக் கொண்டேனும், மடிபிடித்தேனும், வழக்கெடுத்தேனும் ஜயமடைந்தேனும்! இதெல்லாம் என்ன கனவோ நனவோ என்று பார்த்தால், கனவுமில்லை, நனவுமில்லை; பின்னையென்னவென்றால், ''கனவு நனவுங்கடந்ததோர் கட்டுரை.'' அப்படியா ! கனவுநனவுங்கடந்த நிஜமொன்றிருக்கிறதா ? அதென்ன ! அயர்ந்து ஒன்றுமறியேனென்று சுகமாய்த் தூங்குகிறதா ! இங்கு அறியாமையுமில்லை சுகமுமில்லையே ! பின்னை ? சுழுத்தியுங்கடந்ததோர் நிஜஅவஸ்தையிருக்கிறதுபோலிருக்கிறது ! அதுவா இது ? ஆம் ! தூக்கத்தில் விழிப்பா ? விழிப்பில் தூக்கமா ? தூக்கத்தில் விழிப்பு இந்தண்டையானால் சொப்பனம் ! அந்தண்டையானால் துரீயம் ! அயர்ந்த நித்ரையாம் சுழுத்தியவஸ்தைக் கப்பாலேயுள்ள விழிப்பை ''நனவிற்சுழுத்தி'' என்பார்கள். அதாவது அறிவுகலங்காமலிருக்கையில் புலன் பொறிகளெல்லாம் ஒடுங்கிப்போவதாம். புலன் பொறிகளற்ற விழிப்பே துரீயமாம். அறிவுக்குத்துயிலில்லை. ஆனால் அவித்தை ரூபமாயுள்ள நித்ரை அதைமூடிக்கொள்ள அந்த நித்திரையைத்தள்ளிப் பார்க்கத்தெரியாத ஜீவன் அவ்விருளைக் கண்டு மயங்கிப்போக, அவனுள்ளத்தினுள்ளமாயிருக்கும் அறிவு தன் சொரூபத்திற் கலக்க

சுகமுணர்ச்சியுண்டாகிறது. ஆனால் ஜீவன் 'சிதாபாசனாக' விருந்து மயங்கினமையால் தன்னை மூடிக்கொண்ட அறியாமையையே அறிந்தும் அறிவு தெளிவு படாமையால் அறியேன் என்று சொல்லி அறியாமல் நுகர்ந்த சுகத்தின் உணர்ச்சியிருப்பதால் அதையும் சொல்கிறான். இதனால் அறியாமைக்கப்பாலே அதையும் தெளிவாயறியும் அறிவு ஒன்றிருக்கிறதென்றும் அந்த அறிவு அறியும் வெளி அஜ்ஞான இருளிற்கப்பால் பிரகாசம் பொருந்தி விளங்குகிற தென்றும் தெரிகிறது! ஆம்! அந்த அறிவுக்கும் ஆதாரமாய் எல்லாவற்றிற்கும் காரணமாய் எப்பொழுதும் குன்றாத பிரகாசத்தோடு விளங்கிக்கொண்டிருக்கும் இந்த அறிவு மயமாகிய பேரறிவும் ஒன்றிருக்கிறது; உன்னறிவைத் தன்னறிவு என்றும் இந்த அறிவுமயமாய்ப் பூரணமாய் நித்தியமாய் எத்தாலும் மங்காது விளங்குமறிவைப் பேரறிவு என்றும் சொல்வர். அல்லது பெண்ணறிவு, ஆணறிவு என்றும் சொல்வர். பெண்ணறிவு-ஆணறிவு என்றால் அறிவுக்குப் பால்வேற்றுமையுண்டென்பதருத்தமல்ல! ஆனால் ஆண்பால், பெண்பால்களுக்குரிய குணமாகிய 'கொடுக்குந்தன்மை' 'பெற்றுக்கொள்ளுந்தன்மை' அவ்விரண்டிற்கும் சுபாவமாயுள்ள குணமாம். இந்த ஆணறிவும், பெண்ணறிவும் கண்டுபேசிக் கொடுத்துவாங்கும் வெளிக்கு அருள்வெளி யென்றுபேர். "அருள்வெளி" கண்டவர் "இலக்கியங்கண்டதற்கிலக்கணங்" கூறியிருப்பதில் "இருளோடு யிருடலற்றுத் தானாயொளிர்வது அருளே" என்கிறாரல்லவா! ஆதலால் இந்த அருள்வெளியில் உடலுமில்லை, உயிருமில்லை, இவையிரண்டுக்கும் காரணமான இருளுமில்லை. இருள் என்றால் மாயை. இந்த மாயை தகப்பனின்றித் தானேபிள்ளைபெறும். இதன்தொழில் "மொட்டைத்தலைக்கும் முழங்காலுக்கும் முடிபோடும் சாமர்த்தியத்தை யொத்திருக்கும்." 'மலடிமகன்' 'முயற்கொம்பு' 'ஆகாசதாமரை' முதலிய அற்புத சிருஷ்டிகளெல்லாம் இந்த மாயை கொலுவிருந்து சிருஷ்டிக்கும். இந்த மாயை மயிலிறகுபோல் மனக்கண்ணுக்கு வெகு அழகாகவிருக்கும். வெயிலில் தோன்றும் கானல்ஜலம்போல் வெகுதூரம் கண்ணுக்கெட்டியபரியந்தம் பரவியிருக்கும். கிட்டிப்போனால் எட்டிநிற்கும். எட்டிப்போனால் கிட்டிவரும். கேட்டதையெல்லாம் கூட்டியும் வைத்துக் கடைசியில் ஆளை மாட்டியும் வைக்கும். என்ன விசாரம செய்தாலும் இடங்கொடுக்கும். தன்னை விசாரித்தால் மட்டும் பொறுக்காது! துணிந்து விசாரித்தார்க்குத் தணிந்துபோம்; விசாரிக்க நினைத்தால் அவிசாரிப்பட்டம் கட்டும். நினைவுள்ளமட்டும் அதற்குமலைவுண்டு; நினைவுகடந்தாலுடனே இருளாய் வந்து மூடும். துணிந்து சென்று அருள்வெளியடைந்தால் அது இருந்த இடந்தெரியாது. ஜாக்ர, ஸ்வப்ன, சுழுப்தியவஸ்தைகள் மூன்றிற்கும்பொருந்த அதற்கு முப்பாழுண்டு. ஸ்தூலப்பாழ், சூக்ஷ்மப்பாழ், காரணப்பாழ் என்னும் முப்பாழும் தாண்டினால் அப்புறம் அருள்வெளியில் தெருள்வழியுணர்ந்து தெளிவுற்றுத்தேறலாம். ஸ்தூல சூக்ஷ்மமிரண்டையும் சேர்த்துக் காரியமென்று பொதுவாகச்சொல்வதுமுண்டு.

"காரியமேழுங் கரந்திடும் மாயையுட்
காரண மேழுங்கரக்குங் கடுவெளி
காரிய காரணவாசனைப் பற்றறப்
பாரண வுமுப சாந்தப் பரிசிதே."—என்பது

திருமந்திரோபதேசம். அருள்வெளியிலிருந்து பழகப்பழக "அருளே தெருளும் தெருளே யருளுமாய்" "விருத்திஞானம்" சித்தித்துக் கடைசியில் (கடுவெளிகடந்த முடிவில்) "அப

ரோக்ஷானுபூதி" யென்று சொல்லும் ப்ரத்தியக்ஷசாக்ஷியாம் சாக்ஷாத்காரதரிசனம் விளங்கும். அதற்குச்சாக்ஷியதுவே! "அதுவானால் அதுவே சொல்லும்" என்பது கண்டோர் கட்டுரை. இந்த சாக்ஷாத்காரதரிசனம் பூர்த்தியாய்க் கிடைத்தால் அன்பு என்பது இன்னதென்று தெரியவரும். அதையனுபவித்துணரலாமேயன்றிப் புலன் பொறியறிவினால் அறிய முடியாது. "அதுவானால் அதுவே சொல்லும்"—"ஆகும்வரையில் அது மௌனம் சாதிக்கும்" பிந்திச் சொல்வதும் அது மௌனத்தாலே. அதுவே மௌனஸ்வரூபம்.

"செப்பரிய அம்பரத்தைக் காத்தாயானால்-தேகமங்கே நிராமயமாய்க் கரைந்துபோகும்
ஒப்பரிய வீசனிட மூலமான வுண்மையறிந்-தறிந் தறிவில் மௌன மூட்டத்
தப்பாது சீவன் முத்தியடையும் பாரு - கற்பூரதீபமாகும் சாரமங்கே
அப்பா கேளறி வென்னதேவிதேவி-யானந்த வானந்த மென்ன சிவமுமாமே.

—மவுனதரிசனம்.

"அன்புருவேயாகியானந்தமயமாயுள்ள" மௌனப் பரதேசியிருக்குமிடமாம் "செப்பரிய அம்பரத்தை" விட்டு நழுவாது அதிலிருந்துவர உன்னைக் "காத்தாயானால்" "தேகமங்கே நிராமயமாய்க்கரைந்துபோகும்"—"உள்ளமுடைந்து உடலழிந்தஅந்த நிலையிலிருந்து" "ஒப்பரிய ஈசனுடைய மூலகாரணமான உண்மையறிந்து," "அறிந்த அறிவில் மௌனமூட்ட" 'அறிந்த அறிவழியவேண்டும்' என்கிற கட்டுக்கடந்து அதற்கப்பாலே "தப்பாது ஜீவன் முத்தியடையும் பாரு." "காரமாம் தேகம்" ஏற்கனவே கரைந்துபோன அந்த ஜீவன்முத்தி திசையில் எஞ்சி நின்ற வாசனுமாத்திரமான "சாரம்" அங்கே கற்பூரதீபம் போல நிரஞ்சனமாயெரிந்து போகும்.

"அப்பா கேள்!" அறிவு என்றாலென்ன? நிரஞ்சனமான நின்னறிவுண்டேயது தான் "தேவி, தேவி" என்று உபாஸகர் தொழுவது. அந்த தேவியேயான நீ (அறிவுமயமாய், நிரஞ்சன நிராமயமாய் எஞ்சிநின்ற நீ) "ஆனந்த வானந்தமென்ன"—ஆனந்தம் ஆனந்தமென்று ஆனந்தாதீத நிலையுறுங்கால், அந்த தேவியோடிரண்டறக் கலந்து ஏகரஸமாயிருக்கும் "அத்துவிதப் பொருளாம்" "சிவமுமாமே!" அபரோக்ஷானுபூதியிலறிவாய்! வாக்குமனமுங்கடந்துள்ள அவ்வுண்மையை வேறு விதமாகச் சொல்லி எழுதிக் காட்ட முடியாது! 'உடலுயிர் உறவு' தான் என்னேவெனில், அந்த சிவமுந்தேவியும் உள்ளபடியத்துவிதமாயொன்றுபட்டிருக்கும் உண்மையை அனுபவித்துணர்ந்தையானால் அதுவேயாகும். அவர்கள் உறவைத்தான் சொல்லேனென்றால்,—

"மைப்படிந்தகண்ணாளுந்தானுங்கச்சிமயானத்தான்வார்சடையான்மாசொன்றில்லான்
ஒப்புடையனல்லன் ஒருவனல்லன் ஓரூரனல்லன் உவமையில்லன்
அப்படியன் அவ்வுருவன் அவ்வணத்தன் அவனருளே கண்ணாகக்காண்பதல்லால்
இப்படியன் இவ்வுருவன் இவ்வணத்தனிவனிறைவனென்றெழுதிக் காட்டொணாதே."

—தேவாரம்.

ஓம் தத்ஸத்

[தேவியை "மைப்படிந்த கண்ணாள்" என்றது ஏனென்றால் தான் 'நிரஞ்சன நிராமயளாயினும், மாயையைத் தன் வசத்தில்தானே தனக்கு ஆபரணாலங்கிரதமாக வைத்திருப்பதால், "அஞ்சனந்தீட்டிய கண்" அழகு பொருந்தச் சோபிப்பதுபோல் மாயை அவள் வசத்திலிருப்பது அவளைச் சோபிக்கச் செய்கிறது

என்பது விளங்கவாம். சிவனை "மயானத்தான்" என்றது பற்றுகளெல்லாம் முற்றும் விட்டு சுட்ட சாம்பல்போல் நீறுன விடத்தே யிருப்பவனுதலால்; 'வார்சடையான்' என்றது மின்னொளியைச்சடையாகத் தரித்தவுன் என்பது விளங்க. தேவி கண்ணில் "மைப்படிந்திருந்தாலும்" சிவன் அதுவுமில்லாச் சுத்தன் என்பது விளங்க "மாசொன்றில்லான்" என்ருர்.]



## II. உயிர் நிலை யுணர்த்தல்.

'உடல்-உயிர்-உறவை'க் கண்டு கொண்டோம். இனி இவ்வுடம்பினைப்பற்றி ஆராயுமுன் இந்தப்பிறப்பு எப்படி வந்தது? இதன் நிலைமை யென்னவென்று ஒளவைபார் வழி பற்றி விசாரிப்போம். பத்துக்குறளில் அவர் "பிறப்பினிலைமை"யை யுணர்த்துகிருர்.

(1) "ஆதியாய் நின்ற வறிவு முதலெழுத்
தோதிய நூலின் பயன்."

நாம் அநேக சாஸ்திரங்களை யோதிக் கற்றதனுலாயபயன் "ஆதியாய் நின்ற அறிவு" முழுமுதற் கடவுள் என்று அறிந்துய்வதேயாம்.

(2) "பரமாய சத்தியுட் பஞ்சமா பூதந்
தரமாறிற் ருேன்றும் பிறப்பு."

பராசத்தியிலிருந்துண்டாய பஞ்ச மஹா பூதங்களின் குண சம்பந்த பரிணமச் சேர்க்கையால் "பிறப்பு"த் 'தோன்றும்'.

comp. ஓங்காரி யென்பாளவளொரு பெண்பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தை யுடையவள்
ஆங்காரியாகியே ஐவரைப்பெற்றிட்டு
றீங்காரத்துள்ளே யினிதமர்ந்தாளே.—திருமந்திரம்.

ஆத்மனுக்குப் பந்தம் சேரும்வழியைக்காட்டுவான்,

(3) "ஓசைபரிச முருவஞ் சுவை நாற்றம்
ஆசை படுத்து மளறு."

என்கிருர். அதாவது ஸப்தாதி ஐந்தும் ஆசைப்படுகுழியில் ஆத்மனை வீழ்த்தும் பெண்யானைகளாம் 'படுகுழி'யில் வீழலாம் 'பிறப்பு' என்னும் உருவம் தொன்றவும் அந்த உருவத்தாலாய பயன் என்னவெனில் சொல்கிருர்:—

(4) "தருமம் பொருள்காமம் வீடெனு நான்கும்
உருவத்தா லாய பயன்."

comp. "ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காதலிரு வர்க்குங் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு."

என்று இப்புருஷார்த்தங்கள் நான்கின் பொருளை இங்கே விளக்கிக்காட்டி யிருப்பதை யுணர்க.

பின்னர் பஞ்ச பூதங்களின் குணபரிபாகங்களைச் சொல்கிருர்:—

(5) "நிலமைந்து நீர்நான்கு நீடங்கி மூன்றே
உலவையிரண் டொன்று விண்."

பிருதிவிதத்துவமாம் நிலத்தில் ஈசன் ஐங்குணம் பொருந்தி விளங்குகிறார். அதாவது ஸப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தம் என்னும் ஐந்து குணங்களும் பிருதிவியில் விளங்குகின்றன. நீரில், கந்தம் நீங்கிய நான்கும், தேயுவாம் அக்னியில், ரஸத்தையும் தள்ள மற்ற மூன்றும்; வாயுவாம் காற்றில் ஸப்த ஸ்பரிச மிரண்டும், ஆகாசத்தில் ஸப்த தன்மாத்திரை யொன்றுமே விளங்கும்.

இந்த ஐந்துக்கும் சரியாக ஐந்து மூர்த்தங்களைச் சொல்கிறார் :—

(6) "மாயன் பிரம னுருத்திரன் மகேசனோ
டாயுஞ் சிவமூர்த்தி யைந்து."

(பிரமா, விஷ்ணு, ருத்திரன், மகேசன், ஸதாசிவன் என மூர்த்திகள் ஐந்து.)

இனி, மேலாகவிளங்கும் சக்தி ரூபங்கள் ஆறையும் கூறுகிறார்:—

(7) "மாலய னங்கி யிரவிமதி யுமையோ
டேலுந் திகழ்சத்தி யாறு."

(பிரமா, விஷ்ணு, ருத்திரன் (அங்கி), சூரியன், சந்திரன், உமை என மேலான சக்திகள் ஆறு.)

(8) "தொக்குதிரத் தோடேன் மூளை நிண மென்பு
சுக்கிலந்தா துகளேழு"

(தோல், இரத்தம், மாமிசம், மூளை, நிணம், என்பு, சுக்கிலம் என ஸ்தூல தாதுக்கள் ஏழு.)

(9) "மண்ணொடு நீரங்கி மதியொடு காற்றிரவி
விண்ணெச்ச மூர்த்தியோ டெட்டு.

(பஞ்ச பூதங்களோடு சூரியன், சந்திரன், பிரத்யக் (ஆத்மா) என்ன மூர்த்திகள் எட்டு.)

(10.) "இவையெல்லாங் கூடி யுடம்பாய வொன்றி
னவையெல்லா மானது விந்து."

மேற்சொன்ன 9-குறள்களிலுஞ் சொன்ன இவையெல்லாஞ் சேர்ந்து உடம்பாகிய ஒன்றில் 'அவையெல்லாம்' (மேற்சொன்னவற்றின் சத்தெல்லாம் சேர்ந்து) ஆனது விந்து. இப்படி உடம்பின் கூறுபாடும் அதற்கு வித்தாம் விந்துவின் உற்பத்தியும் சொன்னபின் "உடம்பின் பயன்" கூறத் தொடங்கி,

"உடம்பினைப் பெற்ற பயனாவதெல்லாம்
உடம்பினில் உத்தமனைக் காண்"

என்று ஜன்மசாபல்ய முணர்த்தி, "உடம்பினாலன்றி உணர்வில்லை" யென்றும், "மாசற்ற கொள்கை மனத்தொடங்கிதிலடைந்தக்கால், ஈசனைக்காட்டுமுடம்பு" என்றும் கூறி, "உயிர்க்குறுதி யெல்லாமுடம்பின் பயனே," ஆதலால், "அயிர்ப்பின்றி ஆதியை நாடு" என்று வற்புறுத்தி,—

"உடம்பினாற் பெற்ற பயனாவதெல்லாம்
திடம்பட வீசனைத்தேடு."

"அன்னத்தா லாய வுடம்பின் பயனெல்லா
முன்னோனைக் காட்டி விடும்."

என்று உறுதிமொழிகூறி முடிக்கிறார். இதனால் தூலதேகம்எடுத்தது உண்மையறியுமாறு ஸபரீக்ஷை வான்பரீக்ஷை செய்யுமோர் அற்புதபொக்கிஷசாலையாக அமைத்து அதை யுபயோகிக்கவன்றி வேறொன்றுக்கு மில்லை யென்று ஏற்படுகிறது. பிறகு "உள்ளுடம்பின் நிலைமை"யைச் சொல்லக்கருதி ஜன்ம ஜன்மந்தோறும் தொடர்ச்சியாய் வரும் சூக்ஷ்ம தேகமாம் உள்ளுடம்பினாலாகக்கூடியதைச் சொல்கிறார் :—

"கற்கலாங் கேட்கலாங் கண்ணாரக் காணலாம்
உற்றுடம்பா லாய வுணர்வு."

அந்தக் கர்ம சரீரத்தின் ஒளி "வெள்ளி, பொன் மேனிய தொக்கு" மென்றும, அது சர்ம பலனைப் புசிப்பதற்காக வெடுத்ததாதலால் அந்த "உள்ளுடம்பு" கர்மம் நசிக்கிற வரையில் ஜன்மாந்தரங்கள் தோறும் கெடாதென்றும், அந்தப் பழமையான கர்ம சரீரத்தின் தொடர்பை "ஆய்ந்தாய" அது "அல்லற் பிறப்பை யகற்றுவிக்கு" மென்றும் சொல்லி, பாப புண்யங்களின் பலனைப் புசிக்கவன்றி இப்பொழுது செய்யுங் கருமங்களின் பலனைக் கொடுக்க வித்தாகவுமிருக்கிறது இந்த மாயவுடம்பென்றும், "வாயுவினுலாய" இந்த உள்ளுடம்பின் பயனே "ஆயுவினெல்லையது" என்றும், "ஒன்பது வாசலையு மொக்க வடைத்து"ப்பார்த்தால் "அன்பதிலொன்றுமான்" என்றும் சொல்கிறார். பிறகு "நாடிதாரணையைச் சொல்லக்கருதி நரம்புகளின் தன்மையையும், தொழிலையும், முக்கிய நாடிகளின் இருப்பிடத்தையும் நன்றாகச் சொல்கிறார். நாடிசுத்தி செய்துகொண்டபின் அந்த "நாடிகளூடுபோய்ப் புக்க நலஞ்சுடர்தான், வீடு தருமாம் விரைந்து" என்றும், "நாடி வழக்கமறிந்து செறிந்தடங்கி, நீடொளி காண்பதறிவு" என்றும் "அறிந்தடங்கி நிற்குமந்நாடிகள் தோறும், செறிந்தடங்கி நிற்கும் சிவம்" என்றும் சொல்கிறார். பாம்பின் கால் பாம்பீற்குத் தெரியுமென்பதுபோல், "நாடிதாரணை" செய்து, அதாவது "நாடி வழக்கமறிந்து செறிந்தடங்கி" "தாமரை நூல்போலும்" நுழைந்து செல்லும் நாடிகளூடே சென்று, அங்கே

"ஆதித்தன் றன்கதிர் போலவந் நாடிகள்
பேதித்துத் தாம்பரந்த வாறு."

அகமுகப்பட்டுப் பழகிய யோகிக்கே தெரியும். "நாடி வழக்கமறிந்தடங்கி"யபின் "வாயுதாரணை" செய்து—அதாவது வாயுவில் மனத்தை ஏகாக்கிரமாக்கித் தரிக்கச்செய்து "மயிர்க்கால் வழியெல்லா மாய்கின்ற வாயு"வை, "உயிர்ப்பின்றியுள்ளே பதி"யச்செய்து, இரேசக பூரக அப்பியாசத்தால் "தாராசுமுனைபோல்" மனதை சமதமாதி நிலைதவறாது நிற்கச்செய்து, உயிர் நிலையறிந்து பிராணனை வசப்படுத்த வேண்டும். இப்படி "வாயுதாரணை"யால் வாசி வசப்பட்டபின் காயசித்தி கிடைப்பது வெகு இலகுவாம். தேகத்துக்குள் நடக்கிறதெல்லாம நன்றாகத் தெரியும். இதை விரித்துரைக்கில் அப்பியாச யோகிகளுக்கன்றி மற்றவர்களுக்கு விளங்காதாகையால் சுட்டிக்காட்டினமட்டோடு விட்டுவிடலாயிற்று. பிந்தி "அங்கி தாரணை"யால் அக்னியை வசப்படுத்திக்கொண்டு, அதனால் ஒரு தீங்கும் வாராது காத்துக்கொண்டு, பிறகு "அமுததாரணை"யால் "கற்பமதி" யென்றும் "கதிர்மதி" யென்றும் சொல்லிய அமிர்த மிறக்கிப்பானம் செய்யவேண்டும்.

"மேலை யமிர்தை விலங்காமற் றுனுண்ணில்
காலனை வஞ்சிக்க லாம்."

"எல்லையி னின்னமிர்த முண்டாங் கினிதிருக்கில்
தொல்லை முதலொளி யேயாம்."

"நிலாமண்டபத்தில் நிறைந்த வமிர் துண்ணில்
உலாவலா மந்தரத்தின் மேல்."

இப்படிக் * "காயசித்தி" பெற்றபிறகு (புனிதமாகப் பெற்ற இத்தேகத்திலிருந்தும் அதிற் பற்றற்றவராயிருந்துகொண்டு)

"உள்ளமே பீட முணர்வே சிவலிங்கந்
தெள்ளியர் அர்ச்சிக்கு மாறு."

உள்ளமே பீடமாகவும் அறிவே சிவலிங்கமாகவும் அருள்பெற்றுத் தெளிந்த மேலோர் அர்ச்சிக்கும் வகையறிந்து உள்முகத்தில் உண்மைப்பூஜை செய்வதே பக்குவர் செய்யும் உபாஸனையாம். இவ்வுபாஸனை பிரம்ம சூத்திரத்தில் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. இவ்வகை யுபாஸிப்போரே உண்மையுபாஸகர். இப்படி "எண்ணி லூழி தவஞ்செய்திங்கீசனை, உண்ணிலைமை பெற்றதுணர்வு." இந்த உள்ளுணர்வினால் பத்தியும், பத்தியினால் முத்தியும் சித்திக்கும்.

* "காயசித்தி" யென்றால் புன்புலால் நாற்றம் பொதிந்த தேகத்தை வெகு நாளைக்கிருக்கச் செய்து கொள்வதென்றருத்தமல்ல: உடலுயிருறவறிந்து உண்மையாக உடலுயிர் ஐக்கியமாம் சாருப சாயுஜ்ய நிலைபெறுவதாம்.

## THE MIGHTY MOTHER THAT SAVES.

### * "MOTHER'S ANSWER."

"Out of all You emerge?

Would you at last, O child of mine, after many toils and endless warfare (for without such all is in vain) emerge and become MY EQUAL?

(Wonderful, wonderful is this that I tell you! Would you too become a Master—when you have seen and known all slaveries, and have ceased to put one before the other.)

Would you, whom I have often silently been with, to whom in the early morning I have come kissing you on the lips to leave Happiness for your waking, whom I have taught long and long my own ways, even for this—become my Equal? would you look me at last in the face?

It shall be then. The way is long but the centuries are long. Faint not. Does my voice sound distant? Faint not.

Even now for a moment round your neck, advancing, I stretch my arms; to my lips I draw you, I press upon your lips the seal of a covenant that cannot be forgotten."

* From *Edward Carpenter*—" Towards Demo cracy " *vide* 'A prodigals' Repentant supplication to his Mother in the last issue, page 245 of *Viveka Chintamani.*

"When the *Serpent-Maiden* is awakened from sleep, the breath turned inward, enters the *Shushumna* canal and moves neither in nor out."—*Sankara's Yoga Taravali.*

"Come unto me all ye that labour and are heavy laden and I will give you Rest.'

"Verily, Verily, I say unto thee, except a man be born again he cannnot see the Kingdom of God."

"I have told you earthly things and you believe not, how shall ye believe if I tell you of heavenly things."

"He that hath the bride is the bridegroom; but the friend of the bridegroom which standeth and heareth him, rejoiceth greatly because of the bridegroom's voice: this my joy therefore is fulfilled."

"Whosoever comes to me through whatsoever path, I reach him; all men are struggling in the paths which ultimately lead to *Me—the Eternal Truth.*"—*Sri Krishna.*

"Lo! I am with you alway, even unto the end of the world."—*Jusus Christ*

## சரணாகதரக்ஷகத்தாய்.

### I.

(அத்துவிதவிலக்கணம்.)

"நினையப்பிறருக் கரியநெருப்பை நீரைக்காலை நிலனை விசும்பைத்
தனையொப்பாரையில்லாத் தனியைத் தழைத்துத் தழுத்த கண்டங்
கனையக் கண்ணீரருவிபாயக் கையுங்கூப்பிக் கடிமலராற்
புனையப் பெருவதென்றுகொல்லோவென்பொல்லாமணியைப் புணர்ந்தே"
—திருவாசகம்

"அறிவார் பராசக்தி யானந்த மெனபார்
அறிவாரறிவுருவாமவ ளென்பார்
அறிவார் கருமமவளிச்சை யென்பார்
அறிவார் பரனுமவளிடந்தானே."

"ஓங்காரியென்பாளவளொருபெண்பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தையுடையவள்
ஆங்காரியாகியே ஐவரைப் பெற்றிட்டு
ரீங்காரத்துள்ளே யினிதமர்ந்தாளே."

"தாமருந்தல் போலத்தம்மைச் சிவனுக்கூணாக்கித்
தாமருளாலுண்டுபேரைதாமாகித்—தாமழிய

வஞ்செழுத்தாலர்ச்சித்தடியார்க்கடிமைசெயிற்
பஞ்சமலக்கொத்தறுமப்பா."—ஒழிவிலொடுக்கம்.

"அம்மாள்சொல்லிதுசும்மாவிருந்துகேள்
பெம்மான்பேறுபெறநில்."—குருமொழி.

"குருவாம்பரனந்திகூடல்குறித்தாங்
கிருபோதுநீங்காதிரு."—ஔவைகுறள்.

"இருமுத்திசாதினமென்றேட்டில் வரைந்து
பதிவைத்தனன்குருபார்."—ஔவைகுறள்

## தனையடைந்த சேய்க்குத் தாயுரைத்தல்.

"Out of all YOU emerge?"

(1) [1]கடுவழி நடந்து களையது மூண்டனை
[2]படுகுழி வீழ்ந்து பட்டனை பாடெலாம்
[3]சுடுவழி நடந்து சுருண்டு துவண்டனை
[4]இடுகுழிக் கிரையா வென்னிடம் வந்தனை!

(2) வந்தனை மைந்தா வழிவே றிலையென
எந்தனை நீங்கி யிடரெலாம் பட்டபின்
வெந்தனை மனமிக நோவெலாம் நொந்து
சிந்தனை வைத்தென் சீரடி சேர்ந்தனை!

(3) சேர்ந்தனை மைந்தா சிவபதமாமெனத்
தேர்ந்தனை மைந்தா துயர்களெலாம்பட்டுச்
சோர்ந்தனை நைந்தே சொல்வனந் தனிலலைந்
தோர்ந்தனை யுண்மையை யுள்ளுணர் வாயினை!

"Would you become my equal."

(4) ஆயினை கடந்தனை யாருத்துயரெலாம்
தாயினை யடைந்தனை தாபந் தீர்ந்தனை
சேயினைப் பெற்றேனைச் சேஷமாயுணர்ந்தனை *
தாயினைத் தோழியா ஆளவு நினைந்தனை!

"It shall be then."—"Does my voice sound distant?"

(5) நினைந்தனை நினைவின் உண்மை யுணர்ந்தனை
நினைந்தவுன் னுண்மையை யானு முணர்ந்தனன்
நினைந்ததோர் நினைவும் நீயென் றுணர்தியேல்
நினைந்ததோர் நீயும் நானுமொன்றாவோமே!

1. கடுவழி—கர்மவழி; 2. படுகுழி—கருக்குழி — பிறவிக்கடல்; 3. சுடுவழி—தபஸ்மார்க்கம். Comp. "முன்னைப் பிறப்பின் முயன்றதவத்தினால், பின்னைப்பெறு முணர்வதான்."—ஔவைகுறள். 4. இடுகுழி—வயிறு 'இடுகுழிக்கிரை'—ஆகாரம். இங்கு 'உருவமனத்தோடு' என்று சுட்டிச்சொன்னதாம்.

* Comp-" பாதிமாதொடுங் கூடிய பரம்பரன்."—திருவாசகம்.

"OFTEN BEEN SILENTLY WITH YOU."

(6) ஒன்றா வோமென்று னுள்ளத் துறைந்தனன்
கன்றா போலுனைக் கனிந்துள்ளே வைத்தனன்
நன்றா வோமென்று நகைத்துன்னை நோக்கியே
குன்றா வொன்றாய்க் குறித்துன்னைக் காட்டினன்.

"COME KISSING YOU ON THE LIPS,"

(7) காட்டினன் காட்டின குறிப்பு முணர்ந்தனை
யாட்டினன் ஆட்டிய ஆட்டமு மறிந்தனை
யோட்டினன் ஒட்டிய ஒட்டமு மோர்ந்தனை
காட்டியு மாட்டியு மோட்டியும் வேட்டனை. †

"TO LEAVE HAPPINESS FOR YOUR WAKING."

(8) வேட்டனை சாலவும் வேட்கை யிறந்தனை
கேட்டனை சொன்னவை கேள்வி யிறந்தனை
தேட்டனை தூய்வெளி தேடலுமற்றனை
மீட்டெனைக் காணவு மீகாதலுற்றனை.

"WOULD YOU LOOK ME AT LAST IN THE FACE?"

(9) உற்றுமேயப்பா உள்வினை தீர்ந்தனை
மற்றுமேயப்பா மாயந்தான் வேறிலை
சுற்றுமேயப்பா காணவே றொன்றிலை
உற்றுமேயப்பா உன்னுளே பாரெனை.

"LOOK AT ME THEN!" "THIS SEAL UPON YOUR LIPS! - FORGET-ME-NOT."

(10) பாரெனை யுன்னுளே 'பரம்பரன்' பாதியாப்
பாரெனை யுன்னுளே பரஞ்சோதி வடிவமாப்
பாரெனை யுன்னுளே பார்முதற் பூதமாப்
பாரெனை யுன்னுளே பார்ப்பான் பார்வையாய்!

"LIFE-ETERNAL"- "CHILDREN OF LIGHT."

"மாயவாழ்க்கையை மெய்யென்றெண்ணி மதித்திடாவகை நல்கினான்
வேயதோளுமை பங்கனெங்கள் திருப்பெருந்துறை மேவினான்
காயத்துள்ளமு தூறவூற நீ கண்டுகொள்ளென்றுகாட்டிய
சேயமாமலர்ச் சேவடிக்கண்நம் சென்னிமன்னித்திகழுமே.'' —திருவாசகம்.

*"TO KNOW THEE (THE KNOWER OF GOD) AND THE ONLY TRUE GOD IS LIFE ETERNAL."

* Comp. "தம்மையறிவாரைத் தாமறிந்து கொண்டபின், தம்மையறிவரோதான்."—ஔவைகுறள்.
"தேவதேவன் மெய்ச்சேவகன்றென்பெருந்துறை நாயகன்
மூவராலு மறியொணா முதலாய வானந்த மூர்த்தியான்
யாவராயினு மன்பரன்றி யறியொணா மலர்ச்சோதியான்
தூயமாமலர்ச் சேவடிக்கண்நம் சென்னிமன்னித்திகழுமே"—திருவாசகம்.

† என்னோடைக்கியத்து வேட்கை யுற்றனை—'சாயுஜ்ய சாம்பிராச்சியத்துக் காசைப்பட்டனை'—என்றபடி. Comp. ஆசைப்பத்து (ஆத்துமவிலக்கணம்) in திருவாசகம்.

II.

# தேவி பஞ்சகம்.

## சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹார திரோபவானுக்ரகம்.

——(+)——

### 1. உற்பத்திவிவரம்-ஜகத் சிருஷ்டி.

[1]தாயைப்பெண்டாண்டு தனயளாப்பெற்றெடுத்து
மாயை கைக்கொண்டு மனதையுமுண்டுபண்ணி
[2]சேயைப்பின்கொண்டு செகத்தையும் சிருட்டித்து
[3]நாயைத்தான் கொண்டுவந்து 4 நட்டுள்ளே வைத்தானே.

1. அறிவுருவாம் ஆனந்தத்தாய். comp. "அறிவார் பராசக்தி யானந்தமென்பார், அறிவாரறிவுருவா மவளென்பார்." பெண்டாண்டு=தானவளான தன்மையில். comp. 'பெண்ணுமாய் பெண்ணுக்கோரா ணுமாய்.' 2.வாலை, the creative Principle. 3. சிதாபாஸ ஆத்மனே. 4. ஹிருதய மத்தியிலுள்ள தகராகாசம்.

### 2. பிரவிர்த்தி-நிவிர்த்தி-அருள்கூடல்.

[5]பேயைப்பெண்டுகொண்டு பேய்க்கோலந்தானுகி
மாயை மயக்கால் மனமெல்லாம் புண்ணுகித்
தாயைத்தொழுதழுது தொந்தமெல்லாமறப்போக்கிக்
காயைப்பழமாக்குங் கருணையொடொன்றுனேனே!

5. நாமரூபபேதமான பேய்கள் சம்பந்தத்தால். comp. 'பூதமொடு பழகி வளரிந்திரியமாம் பேய்கள் புந்தி முதலான பேய்கள் போராடுகோபாதி ராக்ஷஸப் பேய்களென்போதத்தை யூடழித்து,வேதனை வளர்த்திட.'

### 3. ஊனுடம்பு-உள்ளுடம்புநீக்கிக்காயசித்திபெறல். †

[6]பெற்றதோர் வீட்டிற்குப் பற்றறவே கொள்ளிவைத்து
[7]உற்றதோர் வீட்டினுகந்துமே தான் வசித்து
[8]மற்றதோர் வீட்டை மறந்திடாதிறந்திறந்து
[9]பெற்றதோர் வீடும் பெருவாழ்வும் பெற்றுரார்!

6. ஊனுடம்பு-வெளிப்பிரபஞ்சம்; 7. உள்ளுடம்பு-உட்பிரபஞ்சம்; 8. முத்தியிலிச்சை வைத்த முமுக்ஷுவா யெத்தனையோ ஜன்மங்களெடுத்துக் கடைசியில்; 9. ஸத்யலோகப்பேறு—காயசித்தி—பிறப்பறுத்தல்.

### 4. (மூலாவரண)திரோபாவ நீக்கம்-தற்பதமிகுதி-முத்திசித்தி.

பிறந்ததோர் வீட்டிற்கிறந்தேனுகிப்
புகுந்ததோர் வீட்டிற் சிறந்தேனுகி
[10]யிசைந்ததோர் வீடெல்லாம் விட்டுவிட்டு
[11]நிறைந்ததோர் வீட்டில் நிலையாக்குடிகொண்டேனே!

10. சித்திக்கும் முத்திக்கு மிடையிலேயுள்ள அவஸ்தைகளெல்லாம் நேதித்துத்தள்ளி. 11. ஸம்பூரண மான முத்திவீட்டில் நிரந்தரமாக இருக்கலானேன்.

### 5. 'தத்தாரிப்பிள்ளையின் தளர்வு நீக்கம்'-'சாந்தோபசாந்தானுக்ரகம்.'

அலைந்தலைந்து பட்டதெல்லாம் போதும்போதும்
குலைந்துநிலை யந்தோவெந்தா யொடுங்காநாயேன்!
மலைந்தலைந்துயிர் நலிந்தேதா னயர்ந்தேபோனேன்!
உலைந்தலர்ந்துன் காலடைந்தேன் கலையுந்தீர்ந்தேன்!

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

† காயசித்தி பெறலாவது 'பிறப்பறுத்த'லேயாம். Comp. "உடம்பிரண்டுங் கெட்டாலூறு பயனென்றுண்டு, திடம்படுமீசன்றிறம்."—ஔவைகுறள். "தன்னையறிந்து செறிந்தடங்கித்தானற்றால், பின்னைப் பிறப்பில்லை வீடு."—Ibid.

# "THE WAY TO SELF-CONQUEST."

## The Parable of the Good Shepherd, or, How to Overcome Anger.

*A Helpful Hint from the Rustic Sage of Narayanvanam.*

A correspondent of the *Madras Mail* who complained of the "difficulty of overcoming mental bad habits, such as anger, discontent and worry" is recommended "to apply to Mr. Eustace Miles, "who is a specialist in overcoming all the ills flesh is heir," by another correspondent who evidently knows him and promises "to furnish him with the address." This Mr. Eustace Miles, it is pointed out, shows, in the columns of the *Daily Mail*, that once the "normal" is reached "with regard to organs, muscles and nerves" the drudgery of daily exercise is no longer necessary to keep fit, and that a little care in diet is all that is needed. The art of keeping the "organs, muscles and nerves," in the "normal" and "fit" condition to perform their functions in "full efficiency" and help the student in getting full control over his thoughts and through such control achieve "conquest of his mind" is pursued as a divine art by Yôgins who instruct their initiates in the mystery of controlling not merely the "organs, muscles and nerves" but every nerve-cell and each breath they draw in or throw out. It is indeed impossible, as the correspondent of the *Madras Mail* points out, to attain the highest state of efficiency in health so long "the bad mental habits such as anger, discontent and worry" are not overcome and the mind brought completely under control. "Worship by Work" is extolled by Sri Krishna as "true Renunciation." And this renunciation is necessary to obtain success in controlling the mind, which is the true end of Yôga. Says the Lord Sri Krishna:—

So is that well said:

"By works the votary doth rise to faith
And saintship is the ceasing of all works;"
Because the perfect Yôgin acts—but acts
Unmoved by passions and unbound by deeds,
Setting result aside.

"To be unmoved by passions" is the first and most essential condition for the enjoyment of "Health" in whatever plane it be. What we call "Physical" "Mental" and "Spiritual" are not so many air and water-tight compartments separated from one another; but they simply represent the properties of Inertia, Motion and Rest inherent in all things.

---

### ON GETTING ANGRY.

The Lord Buddha teaches:—"My friend who hast retired from the world and art angry with this man, tell me what it is you are angry with? Are you angry with the hair of the head, or with the hair of the body; or with the nails etc.? Or are you angry with the watery element or with the fiery element, or with the windy element in them. What is meant by the venerable N. N. is only the five groups, the six organs of sense and the six sense-consciousness. With which of these are you angry? Is it with the form group? or Is it with the sensation group, perception group, predisposition group, or consciousness group? Or, Are you angry with an organ of sense, or an object of sense, or a sense-consciousness?

"For a person who has made the above analysis, there is no hold for anger, any more than there is for a grain of mustard seed on the point of an awl, or for a painting in the sky."

---

## The Origin and Cessation of the Human Being.

"The five groups form the heavy load
And man this heavy load doth bear;
This load it is misery to take up,
The laying down thereof is Bliss."

"He who this heavy load lays down,
Nor any other taketh up,
By extirpating all desire
Shall hunger lose, Nirvana gain."

---

## The Problem of Misery.

"What is it causeth man to be?
What has he will not be controlled?
Who are they that re-birth endure?
From what can respite never be found?"

"Desire ay causeth man to be
Man's thoughts refuse to be controlled,
All sentient life rebirth endures,
From misery no release is found."

---

On ignorance depends karma,
On karma depends consciousness,
On consciousness depends name and form,
On name and form depends the six organs of sense,
On the six organs of sense depends contact
On contact depends sensation
On sensation depends desire
On desire depends attachment
On attachment depends existence
On existence depends birth
On birth depends old age and death, sorrow, lamentation, misery, grief and despair. Thus does the entire aggregation of misery arise.

But on the complete fading out and cessation of ignorance ceases karma
On the cessation of karma ceases consciousnes
On the cessation of consciousness ceases name and form
On the cessation of name and form ceases the six organs of sense
On the cessation of the six organs of sense ceases contact
On the cessation of contact ceases sensation
On the cessation of sensation ceases desire
On the cessation of desire ceases attachment
On the cessation of attachment ceases existence
On the cessation of existence ceases birth.

On the cessation of birth ceases old age and death, sorrow, lamentation, misery, grief and despair. Thus does this entire aggregation of misery cease.

---

". . . . and only to desire
The purity of Yôg is to pass
Beyond the *Sabdabrahm*, the spoken Ved.
But being Yôgi, striving strong and long,
Purged from transgressions, perfected by births
Following on births he plants his feet at last
Upon the farther path. Such an one ranks
Above ascetics, higher than the wise,
Beyond achievers of vast deeds! Be thou
Yôgi Arjuna! And of such believe,
Truest and best is he who worships ME
With inmost soul, stayed on MY MYSTERY."—*Bhagavat Gita.*

"Words used in a new sense and figuratively, dart a delightful lustre; and *every* word admits a new use, and hints ulterior meanings. We have not learned the law of the mind——cannot control and domesticate at will the high states of contemplation and continuous thought."—*Emerson.*

"அச்சமாங் கார மகத்தடக்கி ஞற்பின்னை
நிச்சயமா மீசன் நிலே."—ஔவை குறள்.

"குலத்தைக்கெடுத்தது கோடரிக்காம்பு"-"மனத்தைக்கெடுத்தது மஹாத்திஞேர்வார்த்தை."

# "இருளன் குடிசை போட்டுப்பார்!"

"ஆங்காரமழிந்தால்து ஓங்காரமாமே."

"இருளன் குடிசைபோட்டுப்பார்!"—சோரைக்காய்ப்பரதேசி (மந்திரஸித்தர்.) *
"கோபமிருக்கின்னு மதையறவே போக்கவேண்டும்."—திரிசிரையோகி(யோகஸித்தர்.)

ஓங்காரி–The ruling Principle of Life.

"ஓங்காரியவள்தானே ஆங்காரியாயினள்
ஆங்காரியாகியே ஐவரைப் பெற்றெடுத்தாள்
ஆங்காரிபமெல்லாம் ஐவர்தந் தொழிலாம்
ஆங்காரமழிந்தாலது ஓங்காரமாமே."—அகண்டானந்தம்.

1. ஒருசொல்—குருசொல்—" My word is like a sword."

இருளன்குடிசை போட்டுப்பாரென்று சொல்லாதேயவன் சொன்னனண்டே
மருளின்மயக்கா லுண்மையறியாது மயங்கித்தவித்தன னப்போவாண்டே
'இருளன்'காட்டிற் கால்நடைமேய்ப்பவ னென்றேயொருவன் சொன்னனண்டே
அருளின்மகிமையா லதுபோல்நடந்ததோ ரதிர்சயமிப்போ தென்னேயாண்டே!

2. இருளன்குடில்–கருவுட்காட்டில்–" In the wilderness of Thought."

குருவுக்குரியநா ளுதயம்மாகிற நடுநிசிதாண்டிய வேளையிலே
அருவுருவாமென் னம்பிகை பதம்போற்றியழுதுதொழுதியானிருக்கையிலே
கருவுக்குள்ளொரு இருளன்குடிசை காட்டிலேதோன்றி மிளிர்ந்ததகாண்
உருவொடமைந்த பசுவொன்றுபுலத்தில் புலிவாய்ப்பட்டுத் தவித்ததுபார்.

3. புலத்திற்பசு-புலிகிலி—அஹமுண்டேல் பயமுண்டு.
"The good shepherd"-"The Beast and the Prey."

புலிவாய்ப்பட்டது பசுவெனஅம்பிகை பெரிதுங்கடிந்து போதித்தாள்
கிலிவாய்ப்பட்டதொர் பசுவென்றதையான் கிட்டிநெருங்கித் தேற்றவுந்தான்
வலிவாய்வரிவேங்கைப் புலியொன்றுபுதரின் மறைவாயிருந்தெதிர் பாய்ந்ததுபார்
புலிவாய்ப்படா தப்பசுவைக்காப்பான் வலித்தப்புலியை வெருட்டினன்யான்.

4. வெருட்டியபுலி(கிலிபுலி)-குருட்டுக்கிழவி. "The Thief:" his ways and disguises.
பயத்துக்குக்காரணமான அஞ்ஞானமுள்ளவரையில் பயமு நீங்காது. Ingnorance the cause of all misery.

வெருட்டியுமோடாது வேங்கைப்புலியது உருட்டியுருட்டி மருட்டியதே!
மருட்டியுமதனை மாயப்புலியென்று வெருட்டியடித்தேன் வலிமிகவே!
உருட்டிமருட்டிய தூளையுமிட்டுக்கொண் டுறுமியுறுமிப் பொருமியது!
வெருட்டியபுலியது குருட்டுக்கிழவியா யிருட்டறைமூலையி லிருந்தழுதாள்!

5. லெண்டிமகள்—சண்டித்தனம்-Nature of Ingnorance.
பயத்துக்குக் காரணமான அஜ்ஞான சுபாவம்—கெஞ்சினல்மிஞ்சும் மிஞ்சினற் கெஞ்சும்.

அழுவதுகண்டியான் ஆலசியங்கொண்டு அன்போடவளை யாற்றப்போனேன் †
தொழுவதுகண்டவள் பொழுதுவிடிந்தும் சண்டித்தனம்செய்தாள் லெண்டிமகள்
கழுவதுபோலக் கசடுறுமொழிகளை யழுதழுதாண்டே யவளுரைத்தாள்
உழுவதுபோலயான் உள்ளுறுகளையை வேரொடுபிடிங்கி யெறிந்துவிட்டேன்.

* Otherwise known as *"the rustic sage of Narayanavanam,"* a brief sketch of whose life appeared in the *Madras Mail,* at the time of his demise.

† லய விக்ஷேப கஷாய ரஸாஸ்வாதமென்பவற்றில் இது லயவிக்னமாம். 10–வது பாட்டின்கீழ் பார்க்க,

6. அழுகற்செடியில் மாயப்பாம்பு—எள்ளுக்கொல்லையிலோர் கள்ளப்பாம்பு.

* The Individual merging in the Universal-The latent Cosmic Energy in Man.

காமக்குரோதாதிதாகதாபங்கட்குட்பட்ட இந்திரியக் கூட்டமாம் சீவனிடத்தில் மறைந்துறையுமோர் ஆவரணசக்தி.

பிடிங்கியெறிந்தவக் களையதுகண்ணுக் கெள்ளுச்செடிபோ லிருந்ததுபார்!
மடிந்ததுபோகவும் மாயப்பாம்பொன்று அழுகற்செடியிருந் தெழுந்ததுபார்!
கடிந்ததுசீறிச் சினந்துவரவும் மாண்புடையிந்திரன் ‡ கதைபறித்தே
படிந்ததுவீரிய மாண்டுவிழும்படி 'வாசிவா'வென்றதை விழவடித்தேன்.

7. ஒருசாண்பாம்பது-குண்டலியென்பார்.

The 'Primal Energy' symbolised as Serpent (Symbol of vibratory motion)

வீழ்பிடித்தபாம்பினிளம் சாணளவேயானாலு மதன்விஷந்தான்காலாக்னி நெருப்பேயாகும்
சீழ்பிடித்தபுண்போலது காயம்பட்டால் வீரியமெல்லாஞ்சிதைந்தேதம்பி வீணாய்ப்போகும்
தாழ்வரையிற்றபசியற் றும்யோகியர்கள் தாமுடன்குண்டலியென் றதையேதொழுவர்
கீழ்படியிலதுசீறிற் பெரிதாந்துன்பம்! மேற்படியிலதுசிவனுக் கெழில்பூணாம்.

N. B பிரமத்துக்கு நான்குபாதம் (*vide* Bramasutram) நாலு சாணில் ஒருசாண்=பூ: வியாகிருதி-அக்னி.

The seat of the latent Energy is to be traced in and about the Hypogastric plexus or Pelvic Brain.

When this latent cosmic energy in man is fully roused and *controled* all things are possible; when *uncontroled* it is most dangerous

8. சீவரணம்-சிவசீவபேதம். To Master it is to become Siva the Lord. To be mastered by it is to be *Jiva* the Bondman.

ஆபரணந்தானதுவுஞ்சிவனுக்கப்பா அருமையாம்சக்திமிக வாய்ந்தேயுளது
சீவரணந்தானப்பா வதன்விஷத்தால் சிவஜீவபேதங்க ளதுவின்செய்கை
ஆவரணவிக்ஷேப மிரண்டுந்தாண்டி யதிமேலாந்தத்துவத்தை யறிந்துளார்க்கு
சீவரணம்சற்றேனு மதனாலில்லை ஆனாலுமதன்வலிதான் மிகவும்பெரிது.

9. குண்டலிசக்தி-அதிஷ்டானம்: அக்னி. Kundalini-The Invisible subtle Fire or Energy.

மிகப்பெரியவலிபெற்ற குண்டலிக்கே யதிஷ்டானதேவதையு மக்னியப்பா!
சிகப்பெரியத்திக்கடவுள் ஜ்வாலித்தாலும் செப்பரியகுண்டலியின் தீயேமேலாம்
$ உகப்பரியவுண்மையினின் றுள்ளவாறே சகப்பிராந்திவிட்டார்க்கது சீறிப்பின்னர்
மிகப்பெரியகுளிர்ச்சிதந் தடங்கிப்போகும்! ஆனாலுமதையடக்கல் மிகவுங்கஷ்டம்.

10. § பாம்புஞ்சாரையுமிழையத்தடுத்தல். Discrimination of Matter and Spirit.

அடக்கல்மிகக்கஷ்டமென்ற அரியபாம்பை அரியரனுக்காபரணமாந் துரியப்பாம்பை
மடக்கியானடித்ததையா தேவர்கண்டு துடுக்கனிவன்வெகுமுடுக்காய்ச் செய்தகாரியம்
அடக்கினாம்பொறுத்திருத்தல் கூடாதென்று அதிஷ்டானதேவதையைப் பணிந்துபோற்ற
துடுக்கரையடக்கியாளு மக்னிதேவ வெடுக்கென்றொருசோதனைசெய் தருளப்பார்த்தார்.

---

* Comp. 'The Products "seven" in Primal Energy merge.'

‡ 'இந்திரன்கதை'-பிராணன். $ 'உகப்பரிய:'-உன்னுதற்கரிய-நினைத்தற்கரிய

§ நிர்விகற்பசமாதிக்கு இயல்பிலே இடை யூறாகவுள்ள லய விக்ஷேப கஷாய ரஸாஸ்வாதத்தில், இது 'லயத்தை' க்கெடுத்தலாம். 5-வது பாட்டில் 'ஆலசியங்கொண்டு,' 'அன்போடு' அவித்தையை 'ஆற்றப்போனதே'லயவிக்னமாம். There are two fundamental properties corresponding to Matter and Motion—"two natures, the fixed and the volatile, which we liken to two serpents." The fixed nature is likened to a serpent without wings; the volatile, to a serpent with wings: calcination or combustion unites these two into one. To check them rushing to unite is to conquer their natural affinity, which cannot be done unless one knows the last secret of Nature and has thereby conquered it. To seperate matter from motion and see each in its true relation and apart from the other is the *summum bonum*—the alpha and omega of all research—the root of all philosophy—the Discriminative Wisdom that liberates the soul from the bondage of the flesh *i. e.* of thought and sense perceptions. துரியம் is the "Fourth Dimension" of mind so called.

11. குண்டலிசோதனை—அக்னிப்பிரவேசம். The crucial Test-The great power of the subtle Fire.

பார்த்தாரவரார்வமுடன் பார்க்கவும்மே பங்கலுறைமின்போலுங் குண்டலித்தாய்
ஆர்த்தெழுந்துசிம்மம்போல் சிலிர்த்துப்பின்னர் மதியதனையறவிழுங்கு மரவாய்ச்சீறி
ஊர்த்துவமாவந்தென்ற னுடம்பையெல்லா முள்ளுறவேசுற்றிக்கொண் டேனைத்தீய்த்து
பார்த்தார்கண்டதிசயிக்கப் பசித்தீயாலே யெரித்தாளிரு யோகவீடுந் திரிந்துபோக.†

12. குண்டலித்தாய்க்குப் பழவமுதுபடி-பௌராணிகமந்திரயோகதாரணை.
Meditation of the ancient and mystic properties of Matter i. e., of "*Motion as the mode of existence of Matter*" which is the "living waters of life."

எனையெரித்த தேவியவட் கிங்கிதோப சாரஞ்செய்து
‡ உனையறிந்த வென்றனுக்கு உடற்பசியா லென்னுந்தாயே!
வினையெரித்த வுன்றீயா லெனையெரிக்க மிச்சமில்லை—
எனையடுத்த வுன்றீக்குப் ப ழ வ மு து பணிந்தேயளிப்பேன்—
ந ம சி வா ய

13. அக்னிகுண்டங்குளிர்ந்தது—ஆத்மபூரணம்-Spiritualisation of Matter.
(The involution of Fire into Heat-Light-Eectricity-Magnetism-Magnetic light and the pure Light of Heaveu that lighteth every heart.)

"பணிந்தளிப்பேனென்றுசொல்லிப் பக்தியுடனவளுக்குப் பூசைமிகப்பூ ரித்துச்
பணிந்தளித்த பூசையினை யுளங்கனிந்து அவளேற்று [செய்தேன்
துணிந்தளித்து மனமிறந்த தூய்மைநிறை ஸத்யனென்று
* "தணிந்தெரியுந் தழலொத்த தண்மயனையென் செய்கவென்றாள்!"

14. அக்னிதேவர் ஆலோசனை—இகபரஐக்கியம். The Spiritual Test—Non-Differentiation.

"என்செய்வோம் நா"மென்று இன்புற்றவள் மொழிந்தசொல்லை
புன்சொல்பொறுக் காதவொரு புத்தமுத்தசுத்தனும் ஜாதவேதஸ்
வன்சொல்பல மொழிந்தவந்த வம்பராந் தேவர்மக்கட்
கென்சொல்வோம்! யானேபோ யெரித்திடவோ அவனையென்றார்.

15. இந்திரன் சதியோசனை-பெருமையிற் சிறுமை. Light and shadows or The shades of Heaven.

என்றுமேதீக்கடவுள் சொன்னதோர் சொல்லைக்கேட்டு
இன்றுநாம் கொண்டதோர் கருத்துமீ டேறிற்றென்றுத்
தோன்றுதொட் டிவ்வுலகில் தொழப்பெற்ற விந்திரனை
அன்றுமே யவன்பழித்தா "னெச்சிற்கலைதின்னி"யென்று—

16. குறையிரந்தார்க் குளமிரங்கல்-"குற்றம்போனால் நற்றம்வரும்." The Light of Grace.

என்றுசொன்ன அவனுருவை யின்றேநீ ரெரிக்கவேண்டும்
என்றுசொன்ன தேவர்களுக் கிதமான மொழிபகர்ந்து
கன்றுகாலி யுங்கட்குக் கட்டவில்லை யென்னும்வரமம்
இன்றமுத லுங்களுக் கில்லாமற் போகவென்றார்.

17. அக்னிபகவான் சோதனைகாட்டத் தீர்மானித்தல்-சங்கற்பவிசேஷம்.
The Almighty Power of Thought.

என்றுபேயுள்நினைந்து ஹிதமான மொழிபகர்ந்து
இன்றுநா னங்கேபோய் என்வலியால் சோதிப்பேன்

† இருயோகவீடும்=மூலாதார-ஸ்வாதிஷ்டானம்—The Sacral and Hypogastric plexuses. "திரிந்துபோக'—அதோரேதஸாகாவுள்ளது ஊர்த்துவரேதஸாக மாறும்படிக்கு

‡ To know the true Nature of the subtle Fire or Latent Energy is to transcend material conditions and limtations.

* "மடியில்நெருப்பு'ப்போலும் சாந்தோபசாந்தஸ்வரூபமாம் மோனக்னியை மற்ற அக்னிகள் பாதிக்காவாதலால்.

அன்றுமென்றுமில்லாத வரியதொரு சோதனையை
இன்றுநான் செய்துவர இப்பொழுதே போவேனென்றார்.

18. அக்னிபகவான் பிராமணவடிவு கொண்டுவரல்-† அருவேயுருவாமதிசயம். Materialisation of Spirit.

போவேனென்றுரைசெய்து யஜ்ஞங்கள்செய்தவொரு யாசகன்வடிவுகொண்டு
காவேரிநதிமுதலாய் அஞ்சுநதிபாயுமரும் பஞ்சநதமூர்த்தியருமாய்
யஜுர்வேத சாகைமிக ரஸம்பொழியவோதுமொரு கண்டருத்ராக்ஷமணிபூண்
சதுர்வேத தீக்ஷதராய் சகலகுணநிலவொலியும் சத்புருஷசிங்கமாகி—

19. † உருக்காட்டி யுருமறைத்தல்-காட்சி கொடுத்தேகல் (மாலையிற் கூடி மறைதல்)
Materialisation and Dematerialisation.

அந்திசந்தி கூடுமொரு அருமையாம் வேளையிலே
நந்தியவர் தாமேயொரு நயமிகுந்த பிராஹ்மணராய்
வந்ததொரு காட்சிபோல் சிந்தையது குளிரச்செய்து,
சந்தியாவந்தனஞ்செய்து வருகிறேனென்றேகி,—

20. குறிகாட்டி நெறிபேசல்—ஏற்றியிறக்கல்-ஆரோஹணவரோஹணமிதி.
"Shuffling the cards"

முந்தியென்றன் முகத்தொளியாற் கண்டதொரு காட்சிகூறி
‡ நந்தியையான் நயந்தழைத்து நான்முகனு மிவனுரென்று
வந்தித்துக் கேட்கவெண்ணி வசமாகவுட் கார்கையிலே
சந்தியது முடிந்ததென்று சதிராயவர் வந்துநின்று,—

21. அனுக்ரகித்தாராய்தல்-உள்ளச்சோதனை.
Gracious Searching of the Heart.

உந்திக்கமலத்தையான் உற்றுநோக்காதெற்றிவிட்டு
தந்திரமாய்ப் பலவார்த்தை தற்பரமாய் விளங்கக்கூறி
வந்தித்துத்தொழுதேயான்விபூதியுமக்களிப்பேனென்று
சிந்தித்துச்செவியமுத மந்த்ரத்தாலக்னிதனை யன்புள்மிக வேதுதித்து,—

22. இதுவமது—உண்மைச்சோதனை.
Testing of the Truth in Actual Experience.

நந்திமுகம் போல்விளங்க நயமுடனனுக்ரகித்தார்.
பிந்தியதற் கவர்தாமே பொருளுமிக வுரைத்திட்டுத்
தந்திரமாயென்வழியைத் தானறிந்த தாக்கூறி
யந்திரமொன்றிட்டுக்காம்ய வேள்விசெயல் வாசியென்றார்.

23. அனுக்ரக நிச்சயம்-ஆத்ம பூரணவுணர்ச்சி.
The Saving Grace of God - Assurance made doubly sure.

என்றுசொல்லி யவருமேயென்னுண்மை யறிந்துகொண்டு
கன்றுகாலித் தேவர்கட்குக் கருத்திற்பட வுரைத்துக்காட்ட
நன்றுநீ செய்ததொன்று நானுமே கர்மயஜ்ஞன்
இன்றுநானுன்றனுக் கிட்டதொரனுக்ரகந்தான்,—

† comp. "ஆர்க்குந் தெரியாவுருவந்தனை நோக்கில், பார்க்கும் பரமாமவன்." —ஔவைகுறள்.

‡ 'நந்திவித்தை'—one of the 18 Ways of Realising Truth or Brahma Vidya.—A sure method of comparing the objective and subjective Realities "பேசாவெழுத்துடன் பேசுமெழுத்துறில், ஆசான் பரனந்தியாம்" என்ற ஔவை குறளினுலறிவாறிவார்.

24. அஷ்டைசுவரிய சம்பத்தளித்து வினவல்-ஆசையளவு பார்த்தல்.

Granting of all Desires to test the Existence of Desire.

என்றுமுள தாய்ச்சொல்லு மேற்றமுள்ள சுகத்தொடு
இன்றுமுத லுன்றனுக்குச் சம்பத்தெல்லாந் தானேவரும்
கன்றுகாலித் தேவருக்குக் கருமஞ்செய்ய விச்சையென்றார்.
என்றுமுள ஸத்யத்தை நின்றுணரயான்விரும்பி நிஷ்காமிய கர்மமதே—

25. ஆசைமோசஞ்செய்யும் - ஸத்யமேதலைகாக்கு மெனவுறுதிபற்றி நிற்றல்.

Prefering the firm rock of Truth to the shifting quiksands of Desire.
: Principle *versus* Profit.

நித்யசுக மளிப்பதென்று கெட்டியாகக் கொண்டுநான்
நித்யகடன் செய்துவரக் காம்யகர்மஞ் செய்யச்சொல்லி
ஸத்யமுடன் நீர்சொல்ல நம்பியும்மை மோசம்போனால்
நித்யசுகம் பலித்திடுமோ நீரேசொல்லுமுண்மைதன்னை !

26. அப்படி நிற்கும் நிலையே நித்தியோத்தமமென்றாசீர்வதித்து மறைந்தார் - பரிசோதனை முற்றும்.

TRIUMP AT LAST! FINAL CONFIRMATION.

என்றுரைதான் செய்திடவும் ஏதும்சொல்ல வியலாது
நன்றுநீ சொன்னதுந்தான் என்னுரையிங் கேறாது
ஒன்றுபற்றி யொன்றுதாவ லுத்தமர்க்கழ கல்லதானே
என்றுசொல்லி யவர்மறைந்தார் மறையவரும் மதியிழந்தார். †

27. உத்தமனுக்குண்மையுரைத்தல்-ஞான நிலையில் உண்மை யுணர்தல் - REVELATION OF TRUTH.

அந்திசந்தி கூடுமொரு சந்தியாகால வேளையிலே
‡ உந்திமுதல் சாந்திவரை யுண்மையுறை யக்னிதேவர்
இந்தவித மாகவென்னைச் சாக்கிரத்திற் சோதித்து
நந்திதேவர் மூலமாநாம் வந்தோமென்று சொல்லிவிட்டார்.

28. ஆனந்தப்பரவசம் - THE BLISS SUPREME.

சொல்லிவிட்ட செய்தியொன்றை யுள்ளமொன்றிக்கேட்டிடவும்
சொல்லதினா லெட்டாத சோதிர்மய வுச்சிஷ்டாக்னி
கல்லதினுங் கடியவொரு நல்லிருதயங் கரைந்துருகிச்
செல்விவே ரெல்லாம்பாயச் சடமேநடர்க் களமாச்செய்த—

29. அற்புதக்கூத்து - ஆண்டே சாக்ஷி.

THE MYSTIC DANCE 'of Matter and Spirit'-of Evolution and Involution.

அதிர்சயங் கேளாண்டே! நிதர்சனமாக் கண்டதொரு
அதிர்சயங் காணாண்டே! சுதர்சனமாஞ் சோதியரு
தரிசனங்கண் டதிசயித்த விமர்சை யீதாண்டே!
பரிசனங்க ளதிசயிக்க 'விருளன்குடில்' போட்டிங்ஙன் பித்தனானேனாண்டே!

ஓ௦தத்ஸ்த்

† நித்தியமதியாம் ஸாதாக்கிய வொளி மறையப்பெற்றார்.

‡ 'உந்திமுதல் சாந்தி வரை' யிலுள்ள பஞ்சாக்னி:—1. கார்ஹபத்யாக்னி (latent in the Abdominal Brain); 2. தக்ஷிணாக்னி (in the Thoracic Plexuses); 3. ஆஹவநீயாக்னி (in the mouth and cervical plexuses.) 4. ஞானாக்னி (நெற்றிக்கண்) (in the Brain centre between the Eyebrows, 5. மோனாக்னி (அபயஸ்தம்) "The ever full never full bounty of Love" which is all-pervading and fills all, having the *Sushumna* canal(where earth and heaven meet)for its axis.

# "HANGED BY CONVICTION."

(*From the French of Eugene Chavette.*)

# "கோபுரத்தின் மேலேறிய குரங்கு

அல்லது

## "மனதார மரணதண்டனைக் குடன்பட்டவன்."



பற்றுள்ளபற்று—பேயன்பு—பொய்யன்பு.

THE MORTAL LOVER.— This is the little mortal lover in whose heart the low scorching flame of rejected love burns night and day, withering all his life. He lies awake all night with pain gnawing at his heart,and strains his eyes for a glimmer of light but there is none.

பற்றற்றபற்று—தாயன்பு—மெய்யன்பு.

A HARD SAYING.—Who loves the mortal creature, ending there, is no more free—he has given himself away to Death. For him the slimy black Form lies in wait at every turn, befouling the universe; Yet he who loves *must* love the mortal, and he who would love perfectly *must* be free: (Love—glorious though it be—is a disease as long as it destroys or even impairs the freedom of the soul.) Therefore if thou wouldst love, withdraw thyself from love—Make it thy slave, and all the miracles of nature shall lie in the palm of thy hand.

"விட்டுப்பிடி"

DISENTANGLEMENT.— And him thou lovest or her thou lovest— If without confusion thou beholdest such one fixed like a star in heaven, and ever in thy most clinging burning passion rememberest Whom thou lovest,—

THEN ART THOU BLEST BEYOND WORDS AND THY LOVE IS SURELY ETERIAI;

But if by confusion thou knowest not whom thou lovest—but seest only the receptacle of desire which inhabits the world of change and suffering—Then shalt thou be whirled and gulfed on a sea of torment, and shalt travel far and be many times lost upon that ocean before thou shalt know what is the true end of voyage.

"செத்துப்பிழை" - "ஆசையறுமின்!"

BE NOT TORN BY DESIRE.—When burning clinging love assails thee—like a red-hot thing which sticks to the flesh it scorches—BEWARE For love is good and lust is good—but not to tear and rend thee. Slowly and resolutely—as a fly cleans its legs of the honey in which it has been caught—so remove thou, if it only be for a time, *every particle which sullies the brightness of thy mind*; Return into thyself—content to give, but asking no one, asking nothing; In the calm light of His splendour who fills all the Universe—the imperishable, indestructible of ages—Dwell thou—as thou canst dwell—contented.

UNDERNEATH AND AFTER ALL—"நேசித்திரு."

Him who is not detained by mortal adhesions, who walks in this world yet not of it-
Taking part in every thing with equal mind, with free limbs and senses disentangled-
Giving all, accepting all, using all, enjoying all, asking nothing, shocked at nothing;
Whom love follows every where, but he follows not it-

HIM ALL CREATURES WORSHIP—ALL MEN AND WOMEN BLESS.

—*Edward Carpenter*—"TOWARDS DEMOCRACY."

பேரன்பு-Love Infinite.

"அன்பே யானந்தம் அருளுமோ ரானந்தம்
இன்பே யானந்தம் இன்னுயி ரானந்தமென்பர்;
என்பே யுருக்கியின்னுயி ருண்ணன்பன்றி வேறுளதோ
என்பே யுருக்கியன்பா லென்னையாண்ட ஆனந்தநாயகியே."
—அகண்டானந்தம் (ஆனந்தத்தாய் மொழி.)

அப்பொழுது காற்று ஜில்லென்று மந்தமாய் அசைவது தெரியாமலடித்துக் கொண்டிருந்தது. கோபுரத்தின்மேல் பறந்துகொண்டிருந்த காற்றாடி வெகு மிருதுவாயும் உருக்கமாயும் தாழ்ந்த சுருதியில் பாடிக்கொண்டிருந்தது. அதைக் கேட்டவுடன் இவனுக்கு ஏதோ வெகுநாளாய் மறந்திருந்த ஒன்று ஞாபகத்துக்கு வருவதுபோல் தோற்றிற்று. துஷ்யந்தன தான் வெகுநாளாய் மறந்திருந்த சகுந்தலையை திடீரென்று நினைத்துக்கொண்டு அழுததுபோல், ராஜா தன்னை யறியாமல் கரகரவென்று கண்ணீர் பெருக்கினான். அவன் குழந்தைப்பருவம் தாண்டினபின் இவ்வளவு கஷ்டப்பட்டும் அழுதவனல்ல. எப்பொழும் சிரித்து விளையாடிப் பிறரையும் தன்னையும் கேலிபண்ணிக்கொண்டிருந்தவன். இப்பொழுது தான் அழுதது அவனுக்கே ஆச்சரியமாயிருந்தது. அதன் தாத்பரியம் என்னவென்று யோசிக்கையில் காற்றாடியின் கானத்துக்குப் பின்வருமாறு அர்த்தம் ஏற்பட்டது:—

"மனமே காற்று; தேகமே காற்றாடி; அழுகையும் சிறிப்பும் கானங்கள் - காற்றைப் போலவே மனமும் ஓடியலைகிறது. இவ்விரண்டும் ஒன்றைத்தான் தேடுகின்றன—அதாவது அமைதியை!—அமைதியாவது திருப்தியிலிருந்துண்டாகிறது-திருப்தியென்றால் மனநிறைவு - காற்று எங்கும் சமமாய் நிறைந்திருந்தால் இப்படி ஓடி யலையாது -ஏதாவது ஒரு மலைக்குகையில் காலியிருந்தால் மட்டுமே அதை நிரப்புவதற்குஓடும்-அப்படியே நம்மனதும் இந்த ஹிருதய குகையின் "தகராகாசம்' நிறைகிறவரையில் ஓடியலையவேண்டியதுதான். இந்தக்காற்று என், எங்கிருந்து புறப்பட்டது, எங்கேபோய்ச்சேருகிறது என்று ஒருவருக்கும் தெரியாது. நாமும் எங்கிருந்துண்டானுமோ, எங்கே போகிறோமோ தெரியவில்லை—நாம் இந்த ஒரு ஜன்மத்தினுடைய துக்கத்தைக் குறித்தழுகிறோம்—உலகெல்லாம் சுற்றித்திரிகிற இக்காற்று எத்தனை பேருடைய துக்கங்களைக்கண்டு இப்படியழுகிறதோ—ஆனால் இது அழுகிறதோடுகூட சிற்சில சமயங்களில் "இப்படியும் பொய்சுகங்களைத்தேடி அதனால் வரும் பொய் துக்கங்களைக் கண்டு நடுங்குகிற பேதைகளுமுண்டா!" என்று வருத்தத்துடன் நகைப்பதுபோலுமிருக்கிறது.

ஆனால் நம்மனதுக்கு எப்பொழுது திருப்தியுண்டாகும்?—இந்நேரம் யோசித்துத்தான் ஒன்றிலும் திருப்தி யில்லையென்று விட்டுவிட்டாயே!—திருப்தியைக்கொடுக்கிற வஸ்துவே யில்லாவிட்டால் திருப்தியென்கிற பதம் எங்கிருந்துண்டாயிற்று? அர்த்தமில்லாமல் பதமுண்டோ?—சற்றுமுன் "நாம்" என்பதுயார் என்றுதேட ஆரம்பித்தோமே, அதைத் தேடியறிந்தால் அதனால் திருப்தியுண்டாமோ? அதையும் தான் பார்ப்போமே!—இந்த "நாமென்கிற பதத்துக்கு விவஸ்தையில்லை—எதைவேண்டுமோ அதை நாமென்று சொல்லலாம்—தேகத்தை நாமென்று சொல்லுகிறார்கள்—ஐசுவரியத்தை நாமென்று சொல்லுகிறார்கள்—பெண்டுபிள்ளைகளை நாமென்று சொல்லுகிறார்கள்—மனதை நாமென்று சொல்லுகிறார்கள்—இந்திரியங்களை நாமென்று சொல்லுகிறார்கள்—புத்தியை நாமென்று சொல்லுகிறார்கள்—கீர்த்தியை நாமென்று சொல்லுகிறார்கள்—பார்க்கப்போனால் எந்த வஸ்துவை "நாமெ"ன்று அபிமானிக்கிறோமோ அதுவே "நாம்" ஆகிவிடுகிறது!—ஆனால் நாம் தான் உலகத்தில் ஒன்றும் அபிமானிக்கத் தக்கதில்லை என்று விட்டுவிட்டோமே!—வாஸ்தவமாய் விட்டுவிட்டோமா? இல்லைப்போலிருக்கிறது! நாம்தேடி ஆராய்ந்த வஸ்துக்களில் ஒன்றை மறந்து விட்டாற்போல் தோற்றுகிறது!—ஆம்!—அன்புள்ள மனைவியென்று சொன்னோம்—இந்த அன்பை மறந்துவிட்டோம். சற்புத்திரர்கள் என்று சொன்னோம். அதற்கும் அன்புள்ள புத்திரர்

கள் என்றே அர்த்தம்—எவ்வளவு பாக்கியமிருந்தாலும்—அன்பில்லாவிட்டால் என்ன பிரயோஜனம்? அதிருந்தால் எது இல்லாவிட்டாலென்ன? அன்பொன்றுண்டானால் யார்தான் பிழைக்கமாட்டார்கள்? உலகத்தார் எல்லாரும் நம்மிடத்து பூர்ண அன்போடிருந்தால் நமக்கு எவ்வளவு திருப்தியா யிருக்கும்—இந்த அன்பு ஒன்றுதான் முழு திருப்தியைக்கொடுக்கிற வஸ்து; ஆதலால் இனி இதையேதான் "நாம்" என்று அபிமானிக்கவேண்டும்—மற்ற வஸ்துக்களுக்கெல்லாம் மாறுபாடுண்டு—இந்த அன்புக்கு மாறுபாடில்லை! என்றைக்கும் எல்லாரிடத்தும் ஒரே ரீதியானது! நாமே அன்புருவாகிவிட்டால் நமக்கும் மாறுபாடில்லை—ஆனால் பின்னர் இந்த அன்பு காப்பாற்றுமா? நாம் பிறப்பதற்கு முன் இவ்வன்பு எங்கேயிருந்தது?—அன்பே "நாம்," அதைத்தவிர "நாமெ" ன்பதில்லை என்றால், இறந்தபின் வேறு யாரைக்காப்பாற்றவேண்டும்—இறந்தபின் அன்பிருந்தால் அதுவே "நாமா"கவுமிருக்கிறோம்—அது இல்லாவிட்டால் "நாமும்" இல்லை—அப்பொழுது என்னகவலை?—நாம்வேறு அன்புவேறாக விருந்தாலல்லவோ அதிருப்தியும் துக்கமும்! அன்பு இருக்கிற இடத்திலெல்லாம் நாமும் இருக்கிறோம்! அது இல்லாதவிடத்தில் நாமுமில்லை!—அப்பொழுது அதிருப்தி எப்படி வரும்? பிறப்பதற்குமுன் நடந்த பழைய சங்கதிகளைப்பற்றி என் கவலை? இப்படிப்பட்ட அன்பை நாம் இத்தனைநாளாய் மறந்தோமே! என்று பெருமூச்சுவிட்டான்!—அப்பொழுது வெள்ளம் பெருகிய ஆற்றில் நீந்திக்கைசளைத்து ஒரு வாய்த் தண்ணீரும் குடித்தவனுக்குக் காலில் திடீரென்று மணல் தட்டுப்பட்டால் எப்படியோ அப்படி ஒரு ஒய்ச்சலும் மயக்கமும் ராஜாவுக்குண்டாயிற்று—ஐந்துநிமிஷம் இளைப்பாறி சும்மா இருந்தான்.

"போனமச்சான் திரும்பி வந்தான் புதுமணத்தோடு" என்றபடி அப்பொழுது பிரபஞ்சமாயை மறுபடியும் அவனைப்பார்த்து ஏளனம் பண்ணிற்று—"ஓகோ! இப்பொழுது நீ என்னிடமிருந்து தப்பித்துவிட்டதாக ஞாபகமோ! ஏன் வீணாய்ப் பிதற்றுகிறாய்! வார்த்தையைக்கண்டு மயங்காதே! அன்பாவது பூண்ணாங்கட்டியாவது—அது எங்கேயிருக்கிறது! எப்படியிருக்கும் காட்டு பார்ப்போம்! இவ்வுலகத்தில் இவ்வளவு நாளாய் நான் அதைக்கண்டதில்லை; அப்படியே யிருந்தாலும் அவ்வன்பை "நாம்" என்று அபிமானிப்பது போல், தேகம் கீர்த்தி ஐசுவரியம் இவைகளை ஏன் "நாமெ"ன்றபிமானிக்கக் கூடாது' என்று கேட்டது.

"இதேதடா! ராமேசுவரம் போயும் சனீசுவரன் விடவில்லை" என்று நினைத்துக்கொண்டு "உன் ஸந்தேகங்களைக் கண்டு நான் மயங்கமாட்டேன்! எனக்கு சரியான பிடிப்பு அகப்பட்டுவிட்டது—இனி உன் வெள்ளம் என்னை அடித்துக்கொண்டுபோக முடியாது—நீ அங்கேதானே தூரநில்!" என்று அதைத்தள்ளி மேலும் யோசித்தான்:—

"ஆனால் இந்த அன்பென்பது தானென்ன? வெறுவார்த்தைதானா அல்லது அப்படியொரு வஸ்துவிருக்கிறதா? அன்பென்றால் எல்லா வஸ்துக்களையும் சண்டை சச்சரவுக் கிடமில்லாமல், ஏச்சுபேச்சுக் கிடமில்லாமல், சந்தேக விபரீதங்களுக் கிடமில்லாமல் கசடற அறிந்துக்கொள்வதே--அப்படியறிந்துவிட்டால் பேசவேண்டிய அவசியமேயில்லை—அன்புமேலிட்டால் பேச்சு அடங்கிப்போம்! இப்படி அறிவது எப்படி சாத்தியம் என்றால், சேர்க்கைப் பொருளாகிய ஒவ்வொன்றையும் ஆராய்ந்து அதனதனுள் எல்லாவற்றிற்கும் பொதுவாய் தொன்று தொட்டு மாறாது, அழியாது, உலகத்து அவஸ்தைகளுக்குத் தூங்கித் தனதவஸ்தையில் மட்டும் விழித்துக்கொண்டும், பேதப்பட்டு நிற்கும் பொருள்களைத் தனது அபேதத்தால் சேர்த்துப்பிடித்துக்கட்டிக்கொண்டுமிருக்கும் அனாதிகைவல்ய (அதாவது சேர்க்கையற்ற) நிர்க்குணப் பொருளைக்கண்டு அதைவிடாமற் பற்றிக்கொள்வதனால்தான். உதாரணமாக: "கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி" என்று, அன்பிற் கலந்து வாழும் ஸ்திரீ புருஷர்கள் ஒருவர்க்கொருவர் பேசாமலே எவ்வளவு சங்கதிகளை கிரஹித்துக் கொள்ளுகிறார்கள். சிற்சில சமயம் அஞ்ஞானத்தால் பிணங்கிக்கொண்டு ஊடியிருந்தாலும், சற்றுப்பிறகு உத்தமியான பத்நியாயிருப்பவள் கணவனைக் கும்பிட்டு "ஸ்வாமி,

அபராதம், க்ஷமிக்கவேண்டும்! சண்டையிட்டது நாமல்ல-நமக்குள் சண்டையுமுண்டோ? இருவரிருந்தாலல்லவோ சண்டை; நானே நீ, நீயே நானென்றிருப்பவர்களுக்குச் சண்டையேது? ஏதோ க்ஷணகாலம் இங்கு குடியிருந்த ஒரு அகங்காரப்பேய் இரைச்சலிட்டால் அதைக்கண்டு நாம் சிரிப்பதைவிட்டு அதற்காக இப்படி வருத்தமும் கவலையும் அடையலாமோ? "என்று சொல்லாமற் சொல்லும் பார்வையாலறிவிப்பாளானால், எல்லாம் எப்போதும்போல் சரியாகிவிடும். இப்படி அஞ்ஞானத்திலடிபடும் ஸ்திரீபுருஷர்களுக்கே இவ்வளவன்புண்டானால் ஞானத்திற் கலந்த குருசிஷ்யர்களுக்குக் கேட்டானேன்! ஒரு மஹானை அவர் நிஷ்டையிலிருக்கும்பொழுது ஒரு புலி தூக்கிக்கொண்டு செல்ல, அவர் விழித்துக்கொண்டு புலியைப் பார்த்து அதைத் தடவிக்கொடுத்து முத்தமிட்டு "தம்பி! உனக்குப் பசியாயிருக்கிறதா! நல்ல வேளையாய் உன் பசியையாற்ற இந்த தேகத்திலுள்ள சொற்ப மாம்ஸமாவது கிடைத்ததே—அது எனக்கு மெத்த சந்தோஷம்—எனக்கு முக்திபளிக்க இவ்வுருவாய் வந்தவென்னன்பே யாரமுதே! நீ பசித்திருக்க நான் பார்ப்பேனோ!" என்று கசிந்துருகி அப்படியே மறுபடியும் நிஷ்டையிற் சேர்ந்தார். கபீர்தாஸ் தான் சாப்பிட வைத்திருந்த ரொட்டியைத் தூக்கிக்கொண்டோடின நாயை "சுவாமி, நெய்யில்லாத ரொட்டி நன்றாயிராது! ஆகையால் இந்த நெய்யையும் வாங்கிக்கொண்டு போங்கள்" என்று சொன்னார்.

அன்பில் துக்கம் வந்தால் அதைப்போலின்பு வேறில்லை. பாலைக் காய்ச்சக் காய்ச்ச சுவை அதிகரிப்பதுபோலும் தங்கத்தைக் காய்ச்சக் காய்ச்ச பிரகாசம் அதிகரிப்பதுபோலும் சந்தனக்கட்டையைத் தேய்க்க வாசனை அதிகரிப்பதுபோலும், துக்கங்களிலடிபடுவதால் யதார்த்த அன்பு அதிகரிக்கும். சீதை தன்னை வெகு பரிதபிக்கத்தக்க நிலைமையிற் காட்டிற் கொண்டுபோய் விடச்செய்த ராமனை மறுபடி கண்டபோதும் வணங்கி அவன் பெயரைச் சொல்லிக்கொண்டே பூமியிற் புகுந்தாளேயொழிய வேறில்லை. சந்திரவதியை அரிச்சந்திரன் வெட்டும் பொழுதும் அவள் தான் கன்னிப்பருவத்தில் தொட்டுப் பிடித்த அந்தத் திருக்கரத்தால் இறப்பதே மோக்ஷமென்றிருந்தாள். அன்பின் ரஹஸியத்தை யறிந்தனுபவித்தவர்களுக்கு அவ்வன்பு மாறிவிடுமே என்கிற சந்தேகமில்லை. அப்படியே மாறினாலும் பாதகமில்லை. "இதுவரையில் நான் என் வாழ்நாளில் சாப்பிட்டிருக்கும் இனிய போஜனங்களை த்ரிமூர்த்திகள் சேர்ந்தாலும் அபகரிக்க முடியாது! சாப்பிட்டது சாப்பிட்டதுதான்!" என்று நமக்கண்ணனாகியவொரு சாப்பாட்டுராமன் சொன்னதாகவொரு கதையுண்டு. அதுபோல் யதார்த்த அன்பை யறிந்தவர்களுக்கு "நாளைக்கு எப்படிப்போனாலும், இதுவரையில் நாமிருந்தறிந்தனுபவித்த அன்பை த்ரிமூர்த்திகளாலும் அபகரிக்க முடியாதெ"ன்று ஒரு திருப்திபுண்டாகிவிடும். "நீ என்னைக்கொன்றாலும் அப்பொழுதும் உன்னன்பை மறவேன்" என்பார்கள். இப்படிப்பட்ட அன்பை யறியாத ஜந்துக்கள் உலகத்திலில்லை. காக்கையும் தனது குஞ்சுகளிடத்திலன்பாகவிருக்கிறது. ஒருகொடி படருவதற்காக அதற்குக் கிழக்கே நடப்பட்ட ஒரு குச்சியைப்பிடுங்கி வடக்கே வைத்தால் அக்கொடியின் தளிர்களெல்லாம் வடக்கே திரும்புகின்றன. இவ்வன்பின் ரஹஸியத்தை அறிந்தவர்க்கு சொல்ல வேண்டியதில்லை; அறியார்க்குச் சொன்னாலும் தெரியாது. ஆனால் இவ்வன்பை "நாம்" என்றபிமானிப்பதுபோல் மற்ற வஸ்துக்களை ஏன் "நாமெ"ன்றபிமானிக்கக் கூடாதென்றாலோ, மற்ற வஸ்துக்களெல்லாம் நம்முடைய ஆதீனத்திலில்லை. எவ்வளவு உழைத்துப் பாடுபடுபவனுக்கும் ஐசுவரியம் கிட்டுகிறது என்று நிச்சயமில்லை! எவ்வளவு கல்வித்திறமை பெற்றவனுக்கும் கீர்த்தி கிடைப்பது நிலையில்லை. அப்படி கிடைத்தாலும் அவைகளால் திருப்தி யுண்டாகிறதில்லை. நம்மாலாகக் கூடியதெல்லாம் நாம் எல்லா வஸ்துக்களிடத்தும் எப்போதும் அன்போடிருக்க முடியும். அவ்வளவுதான்-அன்பு ஒன்றுதான் நம் கைக்குட்பட்டது. அஃதொன்றே அகப்பொருள் - மற்றவையெல்லாம் புறப்பொருள்கள்.

"அப்படியெல்லாவஸ்துக்களும் இவ்வன்பையறிந்திருக்குமானால் உலகத்தில் இவ்வளவு அதிருப்தியும் துக்கமும் எப்படியுண்டாயின? என்று கேட்டால், அன்பை உள்ளபடி

யறியாமல் விபரீதமாக அறிவதனால் தான் என்று சொல்லல் வேண்டும். அதெப்படியெனில் அன்பின் உண்மையான இருப்பிடத்தையும் ஸ்வபர்வத்தையுமறியாமல், 'சிப்பியை வெள்ளியென்று நினைப்பதுபோலும், கானலை ஜலமென்று நினைப்பதுபோலும்' தோன்றியழியும் அன்பினுருவங்களையே அழியாத அன்பாக் பாவித்து—இத்தோற்றங்களுக்கும் அவ்வன்பிற்குமிடையே முளைத்தவொரு அகங்காரத்தால் அவ்வுருவங்களை நாமென்றும் நமதென்றும் பாராட்டி, தோளில் ஆட்டுக்குட்டியைப் போட்டுக்கொண்டு ஊரெல்லாம் தேடிய இடையனைப்போல், அவ்வுருவங்களில் அன்பைத் தேடியலைகிறோம். அன்பொன்றுண்டு என்றுமட்டும் இயற்கையால் தெரிகிறது. அது எங்கிருக்கிறது எப்படிப்பட்டது என்று தெரிகிறதில்லை. ஆதலால் இதை விபரீத அன்பென்றே சொல்லவேண்டும். ஊமையன் கண்ட கனவுபோல் சொல்லவுமாட்டாமல் மெல்லவுமாட்டாமல் தவிக்கிறோம். இதனால் வரும்துக்கத்திற்குக் கணக்கு வழக்கில்லை. உலகம் உருண்டோடுவதெல்லாம் இவ்வன்பை யறியாமையினாலும், அறிவதற்காகவும், அறியுமட்டுமே! அறிந்துவிட்டால் ஓட்டமெல்லாம் நின்றுவிடும்! உதாரணமாக:—ஒருவன் தான் வெகு அருமையாய் வளர்த்த புத்திரன் இறந்துவிட்டால் விழுந்துபுரண்டழுகிறான். யார் அருமைபாராட்டினது? யாரிடத்தில் பாராட்டினது? என்று விசாரித்தால் ஒன்றும் ஓடிப்போய்விடவில்லை, எல்லாம் இருக்கவேண்டிய இடத்தில் இருக்கிறதென்றேற்படும். யதார்த்தத்தில் ஜடவஸ்துக்களான உருவத்துக்குருவம் அன்பு பாராட்ட முடியாது! அன்பேதான் அன்பையறியக்கூடியது. "நேற்று அவ்விஷயத்தையறிந்தேன், இன்று இவ்விஷயத்தையறிகிறேன்" என்று இரண்டு தனிவிஷயங்களை ஒன்றாகச் சேர்த்துக் கோர்வையாய் ஞாபகத்தில்வைத்து ஒப்பிட்டுப் பார்க்கக்கூடிய "நாமெ"ன்னும் பொருள் நேற்றிருந்தபடியே இன்றும் ஓரே தன்மையதாய் மாறாதிருந்தால்தான் அப்படிப் பார்க்கமுடியும் என்று ஏற்படவில்லையா? அதனாலேயே அப்படி மாறுபாடேயில்லாதவன்பே அந்த "நாம்" ஆதல் வேண்டுமென்றும் ஏற்படவில்லையா? எந்த வஸ்துவையும் அன்பின் வழியாகத்தான் அறியமுடியும்! அன்பில்வைத்தேதான் அபிமானிக்கவேண்டும்! அப்படியில்லாமல் தோன்றியழியும் உருவங்களைத், (நிழலைக்குழியிற் புதைக்க முயலுவதுபோலும், நெருப்பை வைக்கோலில் ஒளிக்க முயல்வதுபோலும்) தனியே எடுத்துப் பெட்டிக்குள் வைத்துப் பூட்டி நாமென்றும் நமதென்றும் பிதற்றிக்கொண்டிருக்க முயன்றால் கேடுவிளையக் கேட்பானேன்! சுருக்கிச் சொல்லின் யதார்த்த அன்பே இன்பம்! விபரீத அன்பே (பொய்யன்பே) அகங்காரம், அதாவது துக்கம்!

"இப்படி அன்பை விபரீத அன்பாக பாவிக்கிற அக்ஞானம் தான் எப்படி உண்டாயிற்று! என்று கேட்டால் அக்ஞானம் அக்ஞானத்தால்தான் உண்டாயிற்று. உதாரணமாக: ஒருவன் கூட்டல் கணக்குப்போடுகிறான். நாலும் இரண்டும் எட்டு என்று கூட்டுகிறான். மொத்தத்தொகை சரிப்பட்டு வரவில்லை. மறுபடியும் கூட்டுகிறான். அந்த நாலும் இரண்டும் எட்டென்றே சொல்லுகிறான். மறுபடியும் சரிவரவில்லை. பத்துத்தரம் கூட்டினாலும் சரியாய் வருகிறதில்லை! கடைசியில் வேறொருவனிடத்தில் போகிறான்! அவன் "எங்கே! கூட்டுபார்ப்போம்" என்கிறான்—"நாலும் இரண்டும் எட்டு"—இரண்டாவது பேர்வழி வாத்தியாராயிருந்தால் முதல்வனை முதுகில் ஒரு அறை வைக்கிறான்! "என்னடா மடையா, நாலும் இரண்டும் ஆறல்லவாவடா?" என்கிறான்—முதல்வன் "ஓகோ! இந்நேரம் இதை கவனிக்காமற் போனேனே! என்ன ஆச்சரியம்!" என்று முதுகைத் துடைக்கிறான்!—இவன் ஏன் இப்படிப் பிசகிப்போகவேண்டும்? என்று கேட்டால் யாரால் சொல்லமுடியும்! காரணம் சொல்லமாட்டாமையால் தான் அதை அக்ஞானமென்கிறோம். காரண காரிய தத்துவத்துக் குட்பட்டு விட்டால் அது ஞானமாகிவிடாதா!

"ஆனால் இவ்வித யதார்த்த அன்புதான் நமக்கெப்பொழுது கிட்டுமோ தெரியவில்லையே! உலகத்தில் எங்கேயாவது யதார்த்த அன்பிருந்தாலல்லவோ நமக்குக்கிட்டப்போகிறது! நூற்றில் தொண்ணூற்றொன்பது இடங்களில் பெண்டுபிள்ளைகள், உற்றார் உறவினர் ஒருவனிடத்தில் பிரியமாயிருப்பதெப்படி

யென்றால், கசாப்புக் கடைக்காரன் கொழுத்து வளர்ந்துவரும் ஆட்டினிடத்திற் பிரியமாயிருப்பதுபோலத்தான். "இல்லாளை இல்லாளும் வேண்டாள், ஈன்றெடுத்த தாய்வேண்டாள்" என்கிறது அலங்காரார்த்தமாகச் சொன்னதல்ல.

ஆனால் இவ்வன்பு நமக்கு சித்திக்கிறவரையில் சுகமில்லையே! சுகப்படவேண்டுமென்று எந்த சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது? ஒருக்கால் ஆயுசுமுழுவதும் துக்கப்படத்தான் பிறந்தோமோ என்னவோ! ஆனால்துக்கமாவது சுகமாவது? எல்லாம் நம்மனதிலிருக்கிறது! நம்முடையயோக்கியதைக்கு இவ்வளவு கிடைக்கவேண்டுமென்று நாமே முதலில் திட்டம்போட்டுக்கொண்டு, பிறகு அவ்வளவு கிடைக்காவிட்டால் அதுதான் துக்கம்! மேலும் நம்முடைய அகம்பாவத்துக்கு எவ்வளவு கிடைத்தால் தானென்ன, போதுமென்று சொல்லப் போகிறதில்லை—நம்முடைய உண்மையான யோக்கியதையைப் பார்த்தாலோ நம்மைத்தூக்குப்போட வேண்டியதுதான்—அப்படிச்செய்யாமல் நம்மை சும்மா துப்பாக்கியினால் சுட்டுவிட்டால் அது பெரிய சுகமல்லவா? முள்ளுமுள்ளாகத்தைக்கும் குதிரை வால் மயிரினாற் செய்த கயிற்றில் தூக்குப்போடவேண்டிய நம்மை மிருதுவான சாதாரண சணற் கயிற்றில் தூக்குப்போட்டால் அதுவே மோக்ஷமல்லவா? நாம் செய்திருக்கிற அக்கிரமத்துக்கு "துக்கப்படுகிறோமே!" என்று சொல்லவும் வாயுண்டோ? வேணும்! நன்றாய் வேணும்! கழுகு பிணத்தைத் தேடியலைவதுபோல் தனது சுகங்களையே தேடியலைகிற இந்த பஞ்சமகாபாதகனை கல்நெஞ்சனுக்கு அன்பும் சித்திக்குமோ? உலகத்தில் "தாயன்புக்கு மிஞ்சிய மாறாத அழியாத அன்பில்லை" என்கிறார்கள். அந்தத்தாயை அறிய நாம் பாக்கியம் பெறவில்லை—பிறக்கும்பொழுதே அவளை உருட்டிவிட்டோம். அவள் எப்படியிருப்பாள் என்று நினைத்துப்பார்த்தாலும் அவள் முகம் மனதிற்குத் தோன்றவில்லை—அவளொருத்தியிருந்தால் அவளிடத்தில் நம் குற்றங்களைச்சொல்லி யாற்றிக்கொள்ளோமோ? இவ்வாழ்க்கையை அவள் வசத்தில் ஒப்புவித்து நிச்சிந்தையாய் அவள் மடியிற் படுத்துத் துயிலோமோ? ஒருக்கால் அவளும் நம்மைத் திருடனென்று உதறி எறிந்துவிடுவாளோ? ஆனால் "பொல்லாத சேயெனிற்றாய் தள்ளல்நீதமோ? புகலிடம் பிரிதுமுண்டோ!"வென்று சொல்லிக்கொண்டே "கல்லேனும்மம்மவொருகாலத்திலுருகும் என் கன்னெஞ்சமுருகவில்லை............ "பரஞ்சோதியே சுகவாரிதியே!" என்று வாய்விட்டலறிப் பாடினான். ஹோவென்றழுதான். உடம்பெலாம்மயிர்க்கூச்செடுத்தது. அன்றுதான் அவன் தாய் இறந்ததுபோல் தோன்றிற்று. மேலும் யோசித்தான்:—

"இதென்ன மடைத்தனம்! 25-வருஷங்களுக்கு முன்னிறந்த ஒரு மனிததேகத்தைக் குறித்து இன்றைக்கு எவனாவது அழுவானா? மேலும் பால்கொடுத்து சோறுபோட்டு வளர்த்தவர்கள் யதார்த்தத்தில் தாயாகமாட்டார்கள். இவ்வுலகமுழுவதும் எவள் கர்ப்பத்திலிருந்துண்டாயிற்றோ அந்த சிவகாமியே நமக்கும் தாயாகவேண்டுமேயொழிய வேறில்லை. அவளைத்தவிர வேறு மானிடத்தாயையும் நாமறிந்ததில்லை! அப்படியிருக்க அவளைக்குறித்தல்லவோ நாமிந்நேரம் அழுததாக வேற்படுகிறது. இதையறியாமல் இந்நேரம் தடபாறுகிறோமே! அவள் கருணைக்கு நாமுமுரித்தாவோமோ?" என்று நினைத்தான். இன்னும் அதிகமாயழுதான். "25-வருஷம் வீணாப்போயிற்றே!" என்றுநினைத்தான்.

உடம்பெலாம் நெருப்புப் பற்றியெரிவதுபோல் பொறுக்க முடியாதிருந்தது. ஏதாவது குளத்திற் குதிக்கவேண்டும்போல் பரபரப்பாயிருந்தது. நாம் குழந்தையானாலல்லவோ நமக்குத் தாயும் வருவாள். மீசை தாடியை நெருப்பை வைத்துக் கொளுத்தி பல்லையுடைத்துத் தொட்டிலிற் போட்டால் அப்பொழுது தான் குழந்தை யாவோம்: அதைத் தவிர வேறு வழியில்லை" என்றான். தத்க்ஷணமே தான் இரண்டு மூன்று வயதுக்குழந்தை யாகவேண்டுமென்று ஒரு பேரவா உண்டாயிற்று. "அம்மணி, நான் குழந்தையாகவேண்டும்-என்னகந்தையழியவேண்டும். அகந்தையழியவேண்டும்-குழந்தையாகவேண்டும்!" என்று திருப்பித்திருப்பி இரண்டு நாழிகை நேரம் ஜபித்துக்கொண்டே கண்மூடிவிட்டான். இடையிடையே "தாயே, நான் பரதேசி, ஏழை, அனாதை, போதாததற்குத் தத்தாரிப்பிள்ளை, என்னை உன் கையாலெடுக்கலாகாதோ?" என்பான். மறுபடியும், "அன்று குளக்கரை

யில் நின்ற பார்ப்பாரப் பிள்ளைக்குப் பால்கொடுத்தாயே''—ஆனால் நான் அவர்களைப்போல் வேதசாஸ்திரங்களை ஆராய்ந்தவனல்லன், பிரஷ்டன், சமையற்காரன், 'சாப்பாட்டுராமன், நாடகக்காரன், வேஷக்காரன், பொய்யன், கள்வன், அதனால்தான் என்னைத்தொடமாட்டாயோ?''என்பான். பின்னும் ''தொடமாட்டேனென்றாவது வாய்திறந்து சொல்லக்கூடாதோ? உன் அகந்தையழிய, என்றொருவசவு உன்வாயாற் கிடைத்தாற்போதும்!'' என்பான். ''தாயார் செத்தால் ஒப்பாரி தானே வரும்'' என்று இவனையறியாமல் பாட்டுகள் புறப்பட்டன. (படித்தவனல்லவாதலின் பிழைகள் வெகு இருக்கும்.)

* ''உண்டுடுத்து வீண்காலம் ஓட்டிவரும் பேதை யெனை (என்னம்மா நீ)
கண்டெடுத்துக் கைபிடித்துக் கரையேற்றலாகாதோ (1)

உன் அன்புக்கு வாடியலறியழும் பாலகனை....... (என்னமா நீ)
பல துன்புக்கு மாளாக்கித் தவித்திருக்கப் பார்ப்பாயோ? (2)

உன் கையாறத்தொட்டிலிட்டுக் கண்வளரத்தாலாட்டி (என்னம்மா நீ)
எனை மெய்யார முத்தமிட்டு முகம் பார்க்கலாகாதோ!—(3)

* * *

எத்தனாளில்யான் முதுமை மாறியே இளங்குழந்தை யாகுவேன்?
அத்தனேயிந்தப்பித்துப்பேயனுமாவனோ சுகஜீவியாய்! (1)
நித்தமென்றிவ்வுடலை நம்பியே தெளிவுறாது தவிக்கிறேன்—
சித்தமே சற்றுமுருகவில்லையோ செப்புவாய் சிவகாமியே! (2)
மாதஞ்செல்லுது வருடஞ்செல்லுது உலகும் செல்லுது. பின்னரே
பேதமொன்றின்றி யானுஞ்செல்கிறேன் பேதையாய் சிவகாமியே! (3)
பித்தனென்று பேயனென்றுன் மத்தனென்று பேசிலென்?
நித்தமாகவுன் பேரருள் பெற்றால் வேண்டிலேன் பின்னொன்றுமே! (4)

இதற்குமேல் ஸ்வயமாகப் பாடவரவில்லை—
''மருந்தறியேன் மணியறியேன் மந்திரமொன்றறியேன், எங்ஙன நான்புகுவேன் யார்க்குரைப்பேன் என்செய்வேனேது மறிந்திலனே!'' என்றான்.

''அஸ்தமான வேளையில் அந்திமாடு சாயும்போது பட்டுப்போல் திரிதிரித்து முத்துப்போல் விளக்கேற்றித்தேடுகிறேனென் தாயுன் திருவடிகள்சேவிக்க!'' என்றழுதான்.

பின்னும் ''வண்டாய்த் துவண்டு மௌனமலரணைமேற் கொண்டாற்கோ வின்பம் கொடுப்பாய் பராபரமே!'' என்று அப்படியேமூர்ச்சையடைந்தான். கண்களில் நீர் தாரைதாரையாய் வடிந்துகொண்டிருந்தது. மூடினகண் திறக்கவில்லை துணியெல்லாம் நனைந்துபோய்விட்டது. முகம் சிவந்தது. தொண்டையில் ஏதோகட்டியாக அடைத்துக்கொண்டு ஐந்து நிமிஷத்துக்கொருதரம் ''அம்ம!'' என்கிற சப்தத்தைத் தவிர வேறொன்றும் பேசமாட்டாமல் போய்விட்டது. இரண்டுநாழிகை கழித்து அந்தவார்த்தையும் அடங்கிப்போய்விட்டது. பொழுதும் விடிந்தது.!

கிழக்கு திக்கில் பழுக்கக் காய்ச்சப்பட்ட தங்கத்†தோசைக்கல்போல் சூரியன் உயரக் கிளம்பினான். இரவெல்லாம் துக்கித்துக்கொண்டிருந்த இவ்வுலகின் கண்ணீர்கள்போல்

* முதல் மூன்று பாட்டுகளை ''நீலாம்பரி'' ராகத்தாலும், பின் நாலு பாட்டுகளை ''முகாரி'' ராகத்தாலும் பாடிப்பார்த்தால் கூடியமட்டும் பாடவரும். ''வேதாநாம் ஸாமவேதோஸ்மி'' என்று பகவானால் சொல்லப்பட்டதாயும் பரமசிவனுக்குப்ரீதியாய் ராவணனால் பாடப்பட்டதாயுமுள்ள ஸாமவேதத்தின் ராகம் ''முகாரி'' யாதலால் அதைப் பாடுவதனால் சிவகாமிக்குப் பழைய நாளைய ஞாபகங்களுண்டாகி உளமுவப்பாள் என்பதற்கு சந்தேகமில்லை. ஸாமவேதத்தின் மகிமையை உத்ஸவத்தில் சுவாமிக்குப் பின்னால் போகும் ஸாமகோஷத்தைக் கவனித்துக் கேட்டவர்களுக்கு சொல்லவேண்டியதில்லை. உற்றுக் கேட்டால் சமுத்திரகோஷமும் முகாரி ராகந்தான்.

† ராஜாவோடு இவ்வளவுநாள் பழகினதில் நமக்கு அவருடைய பரிஹாஸப் பேச்சு மட்டும் பழக்கமாயிற்றே யொழிய அவருடைய மகாத்ம குணங்களில் ஒன்றாவது பிடிபடவில்லை. அந்த பரிஹாஸமும் சமயாசமயந்தெரியாமல் அடக்கமாட்டாமல் கிளம்பி விடுகிறது. அதற்காக நம்மை மன்னிக்கப் பிரார்த்திக்கிறோம்.

அருகம் புல்லிலும் மூங்கிலிலையிலுமாகத் தூத்தளித்துக் கொண்டிருந்த பனித்துளிகளை முத்துக்களாக மாற்றி, “அழுத பிள்ளையும் சிரிக்குமாம்” எனச்சொல்லும் தாய்போல் ஒருபார்வையால்உலகத்தைச்சிரிக்கச்செய்துவிட்டான். மகாத்மாக்களுக்குள்ள அலக்ஷியத்தோடு உலகத்துப் புண்ணிய பாபங்களையும் சுத்தாசுத்த வஸ்துக்களையும் சமபார்வையாக ஒரே புன்சிரிப்போடு பார்த்துக்கொண்டு போனான். படுக்கையை விட்டுக் கிளம்பமாட்டாது வியாதியினால் வருந்துபவனையும், “சே! பயித்தியக்காரா - வியாதியாவது மண்ணாங்கட்டியாவது—எல்லாம் ராத்திரியே ஓடிப்போய்விட்டது. எழுந்திரு” என்று அதட்டி எழுப்பும் பலக்கொழுப்பெடுத்த சிநேகிதனைப்போல் தட்டி எழுப்பினான். இன்னும் கால் நாழிகையோ அரை நாழிகையோ என்று சுவாசம் வாங்கிக் கொண்டிருப்பவர்களுக்கு மட்டும் காதிலிரகசியமாய் “இவ்வுலகம் பயித்தியக்காரவுலகம்:ஸாரமற்றது என்று கண்டுபிடித்து விட்டாயல்லவோ - இனி இங்கென்னவேலை, சீக்கிரம் புறப்படு, போவோம் —ஆனாலிந்த ரகஸியத்தை விளையாட்டுப் பிள்ளைகளாகிற உலகத்து மாந்தர்களுக்கு மட்டும் சொல்லக்கூடாதென்று வைத்திருக்கிறேன்—நீமட்டும் என்னோடுவா! இவர்கள் எத்தனை நாளைக்கு விளையாட்டுக் குழந்தையாயிருக்கப் போகிறார்கள்—இருக்கிறவரையில் வேடிக்கையாய்ப் பார்ப்போமே” என்று சொல்வதுபோல் தனது கிரணங்களால் தடவிக்கொடுத்தான் !—இவ்வளவு சொல்லியும் மரணபயம் மாறாத அக்ஞானிகளுக்கு “நானும் இன்னும் கொஞ்சகாலத்தில் உங்களைப் போல எரிந்து அவிந்து சாம்பலாய் போகப் போகிறேனே, அது உங்களுக்குத் தெரியாதோ ?” என்று கலகலவென்று சிரித்தான் !—இந்தப்பாழுங் கோபுரத்துள் என்ன இருக்கிறதென்று பார்ப்பவன்போல் மெதுவாய் எட்டிப் பார்த்துவிட்டு, அங்கே மூர்ச்சையாய்க் கிடக்கும் ராஜாவைக்கண்டு திடுக்கிட்டவன்போல் இவனை நாமெழுப்பக் கூடாதென்று தன் கிரணங்களைப் பின்வாங்கிக் கொண்டான். அந்தகார சத்துருவினிடத்திலிருந்து ஜயிக்கப்பட்ட ராஜ்யத்தில புதிதாய் சிம்மாசனமேறிய இளவயதில் புத்தி முதிர்ந்த ஸ்ரீ ராமனைப்போல் விளங்கினான். அப்பொழுது பக்ஷியினங்களெல்லாம் மங்களம் பாடின. மந்தமாருதத்தால் அசைக்கப்பட்ட தென்னை, கமுகு, கதலி இவைகளெல்லாம் சாமரம் வீசின - பிராமணோத்தமர்கள் சூரியநமஸ்காரமுதலிய ஸ்தோத்திரம் செய்தார்கள். நதி, குளம், ஏரிகளெல்லாம் அந்த இளவரசனுடைய பிம்பத்தைத் தங்கள் ஹிருதயத்தில் வைத்துப் பூஜித்தன. மேகங்களெல்லாம் இவ்வரசனுக்கு சலவைக்கல்லினாலியற்றிய அரண்மனைபோலமைந்தன.

நடுப்பகலில் ராஜா கொஞ்சம் கண்விழித்தான் - திடீரென்று “ஐயையோ! இன்னும் அகந்தையழியவில்லையே! ‘அம்மா’ என்று சொல்லிச் சும்மா இருக்கத்தெரியவில்லையே!” என்று விம்மி விம்மி அழுதான். நெருப்புப்பிடித்த வீட்டுக்குள்ளகப்பட்டவன்போல் இன்னது செய்கிறதென்று தெரியாமல் பரிதபித்தான். மறுபடியும் “நாம் செய்திருக்கிற கர்மத்துக்கு நம்மை ஒருதரத்துக்கு நூறுதரமாக தூக்குப்போட வேண்டியிருக்க நமக்குத் தாயன்பு சித்திக்கவில்லையே என்று சொல்லவும் வாயுண்டோ? அம்மணி, எனக்கு இனி ஒன்றும் தெரியாது! என் கர்மங்களை யுன்னிடம் ஒப்புவித்தேன், என் ஆஸ்தியையெல்லாம் ஒப்புவித்தேன், என் கடன்களையும் ஒப்புவித்தேன். உன் பாதங்களைத்தவிர வேறொன்றும் தேவையில்லை! நீ என்னை என்னவேண்டுமோ செய்துகொள். என்ன செய்வாயோ என்று நான் பயப்படவில்லை, அறியவும் விரும்பிலேன். நீ என்னைக் கொன்றாலும் நீயேகதி, நீயே சரணம். உன் காலின்கீழ் சாவதே எனக்கு மோக்ஷம்.” —“இனியேதெனக்குனருள் வருமோ” என்றுபாட ஆரம்பித்தவன் அதை நினைக்கும்பொழுதே “பகீர்” என்றொரு மயக்கமுண்டாகி மேல்சொல்ல வாயெழாமல் அப்படியே கசிந்துருகி மறுபடி மூர்ச்சையடைந்தான்.

இப்படி எந்நேரமிருந்தானோ அவனுக்கே தெரியாது. காலதேச வியவகாரத்தில் அவன் குடியிருக்கவில்லை—அவன் மறுபடி கண்விழித்தபோது அஸ்தமிக்க இன்னும் மூன்று அல்லது மூன்றரை நாழிகைப் பொழுதிருக்கலாம். விழித்துக்கொண்டதும் “அம்மா உன்னைக் கண்டேனே. ஆனந்தப்பாலுண்டேனே! நீசனாய், பிரஷ்டனாய், நாயினும்

கேடுகெட்ட நாயாகிய என்மேலும் நீ கிருபை வைத்தது விந்தையினும் விந்தையே! உன் அன்புக்கு என்னவாக வாழ்த்துவேன் - நான் பிறந்ததென்ன, வளர்ந்ததென்ன, உன் கோபுரத்தில் வந்தடைந்ததென்ன, எல்லாம் உன் திருவிளையாடலே யொழிய வேறொன்றுமில்லை! இந்த ஒரு நிமிஷத்தைக் காணவல்லவோ இத்தனை விளையாட்டும் - இந்த ஒரு நிமிஷத்தை எதிர்கொண்டழைக்க வல்லவோ இந்த 26 வருஷங்களும் உருண்டோடி வந்தன! —என்ன வேண்டியும் வாய்திறந்து ஒருவார்த்தை பேசமாட்டேனென்று விட்டாய். பேசாவிட்டாலென்ன? இனிப் பேசவேண்டியதென்ன இருக்கிறது! கல்லுங் கரைந்துருகும் அந்த ஒருபார்வை போதாதா? தாய் முகத்தைக்கண்ட குழந்தைக்கு, அவள் பேசாவிட்டாலும், மனத்துக்கு மனமே சாக்ஷியென்று அவளன்பையறியும் சக்தியில்லையோ? அதென்ன பார்வை தெரியுமா?" "அப்பா நானுன்னை மறப்பேனோ? நானுனையறியேனோ? நீ இதற்காக இப்படி அழலாமோ? நீ இருந்தாலும், இறந்தாலும், மறுபடி பிழைத்தெழுந்தாலும் நானுனை மறவேன்—நீ ஸப்தலோகந்தாண்டிச் சென்றாலும் நானுனைக் கைவிடேன்—ஆதலால் நீகுண்டுபோல் தைரியமாயிரு!" என்று வாக்களித்த பார்வையல்லவோ அது! "நீ இருக்க இனி எனக்கென்ன பயம்! என்க்கென்னகுறை! எனதன்னையே! பேசாமடந்தையே!"

"ஆதியனாதியுமாகி யானந்தமா யெனக்கறிவாய் நின்றிலங்குஞ் சோதியவள்மௌனியாய்த் தோன்றிச் சொல்லாத வார்த்தையைச்சொன்னாளடி தோழி—அரும்பொன்னே மணியே யென்அன்பே............சோதியே சுகவாரிதியே" என்று பாடிக் கண்ணீர் பெருக்கினார். இனி ராஜாவை ஏகவசனமாகப் பேச வாய்வரவில்லை. ஆதலால் இனி 'அவர்' என்றே சொல்வோம். அப்பொழுது தெற்கே திரும்பினார்: தூக்குமரம் கண்ணுக்குத் தென்பட்டது. அதன் கயிற்றில் இரண்டு கிளிகள் உட்கார்ந்து கொஞ்சி விளையாடிக்கொண்டு ஊஞ்சலாடின. அம்மரத்தின்கீழ் ஒருகரும்பறையன் நின்றுகொண்டு வடக்கே திரும்பி சாலையில் வருபவர்களைக் கண்ணுக்கெட்டின மட்டும் பார்த்துக் கொண்டிருந்தான். "இந்த தூக்குமரம் இப்பொழுது எவ்வளவு மனோரம்மியமாயிருக்கிறது. எனதன்னை எனைத் தாலாட்ட ஏற்படுத்திய தொட்டிலோ? கிளி கொஞ்சுகிறதே! 'ஓடியொளிகிற திருட்டுக் குழந்தாய், இந்தத் தொட்டிலிற் படுத்தூஞ்சலாடித்துயிலாயோ?' என்று சொல்வதுபோலிருக்கிறது. எல்லாம் இப்படித்தான்; மனது நிறைந்தால் எல்லாம் நிறைந்திருக்கும், எங்கும் குறைவில்லை! அந்தப் பறையனைப் பார், அவன்தான் கொலைகாரன் என்றுசொல்லப்படும் எனதன்னையின் வேலைக்காரன்—ஓடிப்போன குழந்தையைக் கண்டுபிடித்து தாயினிடத்துச் சேர்ப்பிக்கத் தேடுகிறான் போலிருக்கிறது! அவனைப்பார்த்தால் "சுவாமி, எனக்கிந்தத் தொழிலைக் கொடுத்தாயே, நான் என்னபாவம் செய்தேனோ; ஆயினும் உன் கட்டளையைமீறி நடவாது இட்டவேலையைச் செய்யக் காத்திருக்கிறேன்—என்னை மன்னித்து இந்த பாபஜன்மத்தை சீக்கிரம் போக்கக்கடவாய்" என்று தன்னைத்தானே நொந்து கொண்டு பிரார்த்திப்பது போலிருக்கிறது.—என்று சொல்லிக்கொண்டே அவனை இன்னும் நன்றாய் உற்றுப்பார்த்தார். அப்பொழுது திடீரென்று "எப்போ வருவாரோ என்றன் கலிதீர்க்க"வென்று அழுது நொந்து கத்திக்கொண்டிருந்த நந்தனாரைப்போல அந்தக்கொலையாளியும் நடராஜனாகிய தன்னைத்தான் எதிர்பார்ப்பதாக ராஜாவுக்குத் தோற்றிற்று. "என்னப்பனே, நந்தா, இதோ வருகிறேன் பயப்படாதே" என்றார். உடனே தன் தேகத்தைப் பார்த்துச் சொன்னார்: "இத்தனை நாளாய் நீ சொல்லியபடி நான் நடந்து வந்தேன். அப்படி நடந்ததில் நம்மிருவரில் யாராவது சுகப்பட்டதாகத் தெரியவில்லை. இனி கொஞ்சகாலத்துக்கு நான் சொல்லுகிறபடி நீ நடந்துபார். எப்படியிருக்கிறது பார்ப்போம். இனி, கோபுரத்தை விட்டிறங்கிக் கீழே போவோம் வா. இங்கு வந்த காரியம் முடிந்துவிட்டது" என்று சொல்லிக் கீழே இறங்கி கோவிலை நோக்கி வெட்டின மரம்போல் சாய்ந்து தெண்டனிட்டு பட்டணத்துக்குள் பிரவேசித்தார்.

அப்பொழுது அஸ்தமிக்க கொஞ்சநேரம் தானிருந்தது. ஸம்ஸாரதாபத்திலடிபட்டவன் பிரம்மாநந்தமாகிற குளிர்ந்த சமுத்திரத்தைத் தேடியலைவதுபோல், சூரியனும் தனதுதாபத்தைப் பொறுக்கமாட்டாமல் மேற்கு

சமுத்திரத்தைத் தேடிச்சென்றான். தான் காட்டுக்குச் செல்லுகையில் தனது பிரிவாற்றாத பிரஜைகளுக்கு ஸ்ரீராமன் தேறுதல் சொன்னதுபோல் சூரியனும் கருணைகூர்ந்த மந்தஹாஸத்தோடு உங்களை விட்டுப் பிரிவதில் எனக்கும் வருத்தந்தான். இருந்தாலும் காலசக்கரத்தை யனுஷ்டித்து நான் செல்லுகிறேன். உங்களுக்கு எனது தம்பியாகிய சந்திரனைப் பிரதிநிதியாக வைத்திருக்கிறேன். கூடிய சீக்கிரத்தில் இன்னும் அதிக தேஜஸோடு திரும்பி வருகிறேன்" என்று வாக்களித்தான். ஆனால் அப்படிச் சொன்ன சொல்லில் ஒரு துவனியர்த்தம் (உட்கருத்து) ஏற்பட்டது. அதாவது "நான் யதார்த்தத்தில் எப்போதுமிருப்பது இவ்வுலகல்ல—ஏதோ கொஞ்சகாலம் இவ்வுருவங்கொண்டு லீலைபுரிபவந்தவன்-நீங்கள் எல்லோருமே அப்படித்தான். நான் அஸ்தமித்து இந்த தினம் இரைச்சலடங்கி முடிவு பெறுவதுபோல் சிரிப்பும் அழுகையும் சண்டையும் கூச்சலுமாகிய இவ்வுலகத்தின் வாழ்வும் சீக்கிரம் அடங்கி முடிவுபெறப்போகிறது. இந்த உண்மையை யறியாமல் நானும் நீங்களும் எப்போதும் இங்கேயே சாசுவதமாயிருக்கப்போகிறவர்கள் போல் இந்த சொற்பகாலப்பிரிவை யாற்றாமல் துக்கித்தால், வரப்போகிற நிரந்தரமான பிரிவை எப்படி சகிப்பீர்கள்! ஆதலால் என் அன்புள்ள குழந்தைகளே, பிரிவில்லாத நம்முடைய உண்மையான இருப்பிடமாகிய வீட்டைத் தேடியலைந்தீர்களானால் அங்கே என்னை யதார்த்த ரூபத்தில் தரிசித்துப் பிரியாதிருக்கலாம்" என்று முமுக்ஷுக்களுடைய காதில் சொல்வதுபோலிருந்தது.

ராஜா தெருவோடு செல்லுகையில் "தயாநிதித்தாயே" என்று ஜபித்துக்கொண்டே போனார். அப்பொழுது ஊரெல்லாம் பஞ்சகாலமாயிருந்தது. ரூபாய்க்கு நாலுபடி அரிசியாக விற்றது. மழை பெய்து ஆறுமாதமாகி விட்டது. ஏழை ஜனங்களெல்லாம் வேலையகப்படாமல் தவித்தார்கள். ஒரு கட்டுப் புல் கால்ரூபா விற்றது. மாடுவைத்துக்கொண்டிருந்த ஏழை ஜனங்கள் மாடுகளையெல்லாம் விற்று விட்டார்கள், வாங்குவோரகப்படாவிட்டால் அவைகளை அடித்துத் துரத்திவிட்டார்கள். ராஜா கடைத்தெருவண்டை போகையில் ஒரு புல்லுக்கட்டுக்காரி பறைச்சி கையில் குழந்தையும் தலையில் புல்லுக்கட்டுமாக எதிரே வந்தாள். அவளுக்கு 30 வயதிருக்கலாம். பசியினால் மெலிந்திருந்த போதிலும், அவள் முகத்தில் சாந்தமும் பொறுமையும், உண்மையும் விளங்கின. அவள் கண்கள் இவள் வஞ்சகமறியா நெஞ்சத்தவள், என்று முறையிட்டன. அவள் பின்னால் 6வயதுப் பெண்குழந்தை இரண்டு வயது ஆண் குழந்தையைத் தூக்கிக்கொண்டு "அம்மா அம்மா" என்று அழுதுகொண்டே வந்தது. எலும்புந் தோலுமாயிருந்த ஒரு கன்றுக்குட்டி அவள் பின்னால் அந்தப் புல்லுக்கட்டைப் பார்த்துக்கொண்டே வந்தது. அவளும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே ஒரு ஒரு பிடியாகப் புல்லை இறைத்துக்கொண்டே போனாள். அதைத் தின்றுவிட்டால் அதற்குள் நாம் அதன் கண்காணமற் போய்விடுவோமென்று நினைத்தாள். ஆனால் அது அவ்வளவு எளிதில் இவளை விடாமல் அந்தப்புல்லை ஒருவாயாகக் கவ்விக்கொண்டு மறுபடியும இவள் பின்னால் ஓடிவந்து விட்டது. பின்னால் வந்த குழந்தை "அம்மா ஓடாதே, மெல்லப்போ. என்னால் நடக்கமுடியாது" என்றழுதது. அந்தப் புல்லுக்கட்டை அப்படியே கன்றுக்குட்டிக்குப் போட்டுவிட்டால் அன்று அவள் வீட்டில் அவளுக்கும் குழந்தைகளுக்கும் சோறில்லை. அதை யாராவது வாங்கி விடமாட்டார்களா என்று "புல்லு, புல்லு" என்று கூவினாள். யாரும் வேண்டுமென்று கேட்கவில்லை. இதைப்பார்த்த ராஜா "புல்லு என்ன விலை" என்றார். "சுவாமி, எல்லாரும் இவ்வளவு பெரிய கட்டைக்கால் ரூபாய்க்கு விற்பார்கள். நான் உங்களுக்கு ஒண்ணரைப் பணத்துக்குப்போடுகிறேன்' என்றாள். "இந்தா பணம்" என்று கையில் மிகுதியிருந்த மோகராவை அப்படியே அவளிடம் எறிந்துவிட்டு அந்தப் புல்லுக்கட்டைக் கன்றுக்குட்டியினிடத்திற் போட்டுவிட்டு வெகுவேகமாய்ச் சென்றார்.

இதைப்பார்த்த பறைச்சிக்கு இன்னது செய்கிறதென்று தெரியவில்லை. அவள் இதுவரையில் மோகராவைப்பார்த்ததில்லை. "இது இந்த தேசத்துப் பணமில்லைப் போலிருக்கிறதே. கடைத்தெருவில் இதற்கு சில்லரை கொடுக்கமாட்டார்களோ என்னவோ? நீங்களே இதை மாற்றி எனக்குக் கொடுக்க

வேண்டியதைக் கொடுத்துவிட்டு பாக்கியை எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று ராஜாவைப் பின்தொடர்ந்து சென்றாள். அவர் திரும்பிப்பார்த்து "அம்மா! இது இந்த தேசத்துப் பணம்தான். இதை மாற்றினால் பத்து ரூபா கொடுப்பார்கள். உனக்குத் தெரியாவிட்டால் உன் புருஷனிடத்தில் கொடு. வேறு யாரிடத்திலும் கொடாதே—சந்தேகப்படாதே'' என்று சொல்லிவிட்டு நடந்தார். அவள் பின்னும் "சுவாமி அவ்வளவு பெரியதொகை எனக்கென்னத்துக்கு? எனக்குக் கொடுக்கவேண்டியதைக் கொடுங்கள். எனக்கதிகம் வேண்டாம். இந்தப் பணத்தை நான் என் புருஷனிடம் கொண்டு போனால் அவர் எங்கே திருடினாய் என்று என்னைக் கொன்றுவிடுவார்'' என்று பணத்தை எறிந்து விட்டாள். ராஜா உன் புருஷன் எங்கே என்றார். "அவர் தூக்குமேடைக்குப் போயிருக்கிறார். அங்கே அவருக்கு வேலை'' என்றாள். "நானும் சீக்கிரம் அவரைப்பார்ப்பேன். இதை நீ அவரிடத்தில் கொடுத்து இது சிவகாமித்தாய் அவளுடைய தத்தாரிப்பிள்ளை வழியாக உங்கள் குடும்பத்தைக் காப்பாற்ற அளித்த நன்கொடை என்று சொல்'' என்று மறுபடியும் பணத்தை அவளிடத்தில் போட்டுவிட்டார். மறுபடியும் அவளைப் பார்த்து ராஜா கேட்டார். "உன் புருஷனுக்கு சம்பளம் அதிகமோ? பணத்தைக் கொடுத்தால் வேண்டாமென்கிறாயே?'' என்றதற்கவள் "சுவாமி! அதை ஏன் கேட்கிறீர்கள். அவர் தொழில் மகா பாபமானது! குற்றவாளியைக் கொலை செய்வது! அது தலைமுறை தலைமுறையாய் அவருக்கு வந்து விட்டது; அதை வேண்டாமென்று மறுதளித்தால் தலையை வாங்கிவிடுவார்கள்! அதற்காக சம்பளமில்லை, சொற்ப மானியம் விட்டிருக்கிறார்கள். அதிலும் மழையில்லாததினால் ஒன்றும் விளையவில்லை! ஒரு குற்றவாளிக்குக் கால் ரூபா கொடுப்பார்கள். இப்பொழுது நாலைந்து மாதமாக குற்றவாளிகளே அகப்படவில்லை எங்களுக்கு மூன்று குழந்தைகள்—எல்லாரும் பசியினால் வருந்துகிறோம். ஆனாலும் ஒரு பொய் சொல்லவாவது திருடவாவது அவர் சகியார். அதற்காகத்தான் இந்தப் பணத்தை எடுக்க பயப்படுகிறேன்'' என்றாள். இதைக் கேட்ட ராஜா "அவருடைய தர்மத்துக்கும் உனது பதிவிரதைக் குணத்துக்கும் மெச்சி சிவகாமித்தாய் உங்களை இந்தக் கஷ்டகாலத்தில் காப்பாற்ற இந்தப் பணத்தைக் கொடுக்கிறாள். மறுக்காமல் வாங்கிக்கொள்'' என்று பணத்தை எறிந்துவிட்டு வெகுவேகமாய்ப் போய் விட்டார். அந்தப் பறைச்சி "நீங்கள் மகாராஜனாயிருக்க வேண்டும்'' என்று வாழ்த்தினாள். அதற்கு ராஜா "இப்பொழுது வெறு ராஜாவாகத்தானிருக்கிறேன். உன் வாய் முகூர்த்தம் இனி மகாராஜா ஆனாலும் ஆகலாம்'' என்று சொல்லிக்கொண்டே போய் விட்டார். அவளும் சந்தோஷமொரு பக்கமும் சந்தேகமொரு பக்கமுமாக "இன்றைப் பொழுது நல்ல பொழுதாய்ப் போகவேண்டும் தாயே'' என்று சொல்லிக்கொண்டே போனாள்.

ராஜாவும் 'தயாநிதித்தாயே' என்று ஜபித்துக்கொண்டே நடந்தார். அப்பொழுது அவர் மனதிருந்த நிலைமையை வார்த்தையினால் எப்படிச் சொல்லுகிறது! பாம்பின் கால் பாம்புக்கல்லவோ தெரியும்! நாய் பூனை, மனிதன் மாடு, மரம் மட்டை, எதைக் கண்டாலும் ஓம்நம: என்று கும்பிடுவார். குழந்தைகளைக்கண்டு விட்டால் ஆனந்தபரவசராகி மெய்மறந்து அப்படியே பிரமித்து நின்றுவிடுவார், வெகு நாளாய் இறைபடாது கிடந்த கிணற்றைப் புதிதாய் முற்றிலும் இறைத்துத்தூர்வாரினால் எப்படியோ அப்படி ஜிலுஜிலு என்று ஹ்ருதயத்திலிருந்து இன்னமிர்தம் ஊறி உள்ளும் புறமும் ஒன்றாகப்பெருகியதுமன்றி உலகமுழுவதையும் உருத்தெரியாமல் முழுகடித்தது. கொஞ்சமேனும் பசியே தோற்றவில்லை! புதிதாய் சாந்திமுகூர்த்தம் செய்யப்போகிற பெண்ணுக்கு நாயகனோடுகூட மணையிலுட்கார்ந்திருக்கும் பொழுது சாப்பாட்டில் ஞாபகம் செல்லுமா? "தயாநிதித்தாயே'' என்று சொல்லும்பொழுதே நாக்கில் தேன் விழுந்தது போலிருந்தது. வாலும் தோலும் நூலுமாக அழுக்குப் படிந்திருக்கிற உட்புறத்தைத் தவறிப்போய் வெளியில்வைத்து சட்டையை விகாரமாகப் போட்டுக்கொண்டு அழும் குழந்தைக்கு, தாய் ஓடிவந்து சட்டையைக் கிரமமாகத்திருப்பி அதன் அழகான வர்ணமும் பளபளப்பும் மிருதுத்துவமும் விளங்கப் போட்டுவிடுவாளானால்

எப்படியோ அப்படி இத்தனைநாளாய் மேவி ட்டிருந்த மும்மலங்கள் இருந்த இடந்தெரி யாமல் மறைந்துபோக, இத்தனை நாளாய் இருந்த இடந்தெரியாமல் மறைந்திருந்த அன்பு மேலேபெருகி ஆனந்த வெள்ளமாகப் பாய்ந்தது. அவ்வெள்ளத்தில் தன்தேகமெ ல்லாம் கற்கண்டுக்கட்டிபோற் கறைந்துருகி சுழலிலிழுக்கப்பட்ட வைக்கோற் காரை போல் கண்காணாது மறைந்தது. போலீஸ் ஜவான்(dark-lantern)"இருட்டு ராந்தல்" என்று சொல்லும் முற்றிலும் மூடப்பட்ட விளக்கை ஒரு ரகஸியமான கம்பியை அழுத் தித் திடீரென்று திறக்கவும் இருட்டெல் லாம் வெளிச்சமாக மாறித் திருடர்களெல் லாம் ஓடிப்போகத் தன்னந்தனியனுய் வெளி ச்சத்தில் நிற்பதுபோல், பேசாமடந்தைத்தா யின் மௌனரகசியத்தால் அஞ்ஞானவிருள் நீங்கி அகங்கார-மமகாரத் திருடர்கள் ஓடிப் போக அன்பின் ஆனந்த வொளியில் ராஜா வுந் தன்னந்தனியனுய் நின்றார்.

"மூன்று மண்டலத்துளே முட்டி நின்ற தூணிலே
நான்ற பாம்பின் வாயிலே நடுவுநின்ற தீபமா
யீன்றதாயுமப்பனு மெடுத்துரைத்த மந்திரந்
தோன்றுமோரெழுத்திலே சொல்லவெங்கு மில்
[லையே!"

ஒருவன் நாலு கதவையும்சாத்திக்கொண்டு விட்டுக்குள் தூக்குப் போட்டுக் கொண்டிறந் தால், அவனைத் தேடிவருங் கடிதங்களும், க்ஷேமதுக்க சமாசாரங்களும், (arrest-warrant) பிடி வாரண்டுகளும் வாயிற்படியைத் தாண்டிச் செல்லமாட்டாமல் அங்கேயே கத வில் மூட்டிக்கொண்டு வியர்த்தமாய் கீழே விழுவது போல, அகங்காரமிறக்கவும் புண் ணிய பாப கர்மங்களெல்லாம் தேகத்தினு டைய ஒன்பது வாயிற்படிகளைத் தாண்டிச் செல்லமாட்டாமல் அங்கேயே மடிந்து விழுந் தன. எதைப்பார்த்தாலும் ஒருபுதிய அழகும் புதிய காந்தியுமாக விளங்கிற்று. மனிதர்க ளெல்லாம் தேவகந்தர்வகின்னரர்கள் போல் தோற்றினார்கள். நிற்கிற இடம் பூலோகமோ கைலாசமோ என்றிருந்தது. கடைத்தெரு இரைச்சலெல்லாம் வேதகோஷம் போலும் தேவகானம் போலுமிருந்தது. செலவழி க்க செலவழிக்க வளருகிற அக்ஷயபாத்திரம் என்பது அன்புதானென்று நன்றாயேற்பட் டது. இத்தனை நாளாய் தன்னைப் பரிஹஸி ப்பதுபோலும் தன்னை விழுங்கிவிடக் காத்தி ருந்ததுபோலும் தோற்றிய சூரியசந்திர நக்ஷ த்திரங்களும் மரம் செடிகளும் இப்பொழுது இவரைப்பார்த்து "அப்பா, நீ யல்லவோ ஆளப்பிறந்தவன், நீ உன்னுடைய ஆளுகை யை எங்களிடத்தில் ராஜீநாமா கொடுத்துவி ட்டு, எங்களுக்கு சரியாய் ஆளத் தெரியவில் லையென்று எங்களை நொந்தால் நாங்கள் என் னசெய்வோம்? நாங்கள் ஜடங்கள், நீ ஆட்டி வைக்கிறபடி நாங்கள் ஆடுகிறோம்; எங்களு க்கு நீயே கதி, நீயே துணை, நீயே சரணம, நீயே இருப்பிடம்" என்று கண்ணுங் கண் ணீருமாய்ச் சொல்வது போலிருந்தது. பூமா தேவியும் "அப்பா நான் உன்னை ஹிம்ஸிக்க வந்த இளையாள் தாயாரல்ல; என்னைக்கண்டு நடுங்காதே! உண்ணச் சோறும் உடுக்கத் துணியுமில்லாமல் உன்னை யண்டிப்பிழைக்க வந்த உன் சொந்தத்தாய். என்னையுதறி எறி யாதே!" என்று பரிதபித்தாள். உலகத்து மாந்தர்களெல்லாம் "அப்பா, நாங்கள் ஏழை கள், பிழைக்க வழிதெரியாமல் ஸம்ஸாரமெ னுந் துக்க ஸாகரத்தில் மூழ்கினவர்கள். ஏற்கனவே நொந்துகிடக்கிற எங்களை நீ இன் னுமதிகமாக நோகப் பண்ணாதே!" என்று கெஞ்சினார்கள். உடனே ராஜாவும் "ஐயோ! நான் இதையறியாமல் இத்தனை நாளாய் உங் களையும் நொந்து என்னையும் நோகப்பண்ணி க்கொண்டேனே! நான் உங்களுக்குக் கொடு க்கவேண்டிய பாக்கி இருக்க நீங்கள் எனக் குக் கொடுக்கவில்லையே என்று நான் முறை யிட்டால் நீங்கள் எங்கிருந்து கொடுப்பீர் கள்? அதற்காக நீங்கள் என்னைப் பூர்ண மாய் மன்னிக்க வேண்டும்! பழைய விரோத ங்களை அடியோடு மறந்து விடுங்கள்! நானும் உங்கள் ஏழைப்பங்காளிதான்! உங்கள் சுக துக்கங்களிலெல்லாம் எனக்கும் பங்குண்டு! ஆகலால், அபயம்! அபயம்!"——என்று முதல் ஸத்தியமாகிய துக்க ஸத்தியத்தை யறிந்தழுதார்.

(இன்னும் வரும்.)

ஸ்ரீ. ராஜநாயகி.

*Erratum*.—In page 276, line 21, the word "ETERIAI" is a misprint for "ETERNAL" which please correct & read.

# THE ROYAL TOUR IN INDIA.

## இந்தியாவில் வேல்ஸ் இளவரசரது சுற்றுப் பிரயாணம்



கடந்த நவம்பர்மீ 9உ காலை வேல்ஸ் இளவரசர் தமதன்பிற்கும் பிரியத்திற்கு முகந்த மனைவியாரோடு பரதகண்டமெனும் பெயர் புனைந்த இவ் இந்தியநாட்டு மேற்றிசைத் துறைமுகமும் ராஜதானித் தலைநகரமுமான பம்பாய் நகரத்தின்கண் வந்து சேர்ந்தார்களென்று தெரிவித்தோம். அப்போது அந்நகரமானது தேவசிற்பியான விசுவகர்மாவினால் நிருமாணிக்கப்பட்ட நகரமோவென்று சொல்லும்படியான அவ்வளவு அலங்காரத்துடனும் பிரகாசத்துடனும் விளங்கியது. நகரமுழுவதும் கொடிகளென்ன, 'வருக வருக' வென்று முக்கியமானவிடங்களில் தோரணங்களுடன் அமைக்கப்பட்டிருந்த 'நல்வரவு வளைவு' களென்ன (Welcome arches) ஷாப்புகளையும் விவகாரஞ்செய்யும் முக்கிய ஸ்தலங்களையும் அவ்வவற்றிற்குச் சொந்தமானவர்கள் சகலவிதமான ஆடம்பரத்துடனும் அலங்கரித்திருந்த நேர்மையென்ன; இன்னும் இவைகளைப்போன்ற மனத்தைக் கவரவும் வசீகரிக்கவுமான பற்பல விசேஷங்கள் அந்நகரத்தில் நிறைந்திருந்தன. அப்போது இந்தியாவுக்குக் கவர்னர் ஜனரலாயிருந்த லார்டு கர்ஸன் இளவரசர் பம்பாய் வந்திறங்குவதற்கு முன்தினமே தாம் அந்நகருக்குச் சென்றிருந்து வேண்டிய வற்பாடுகளனைத்தையும் செய்து வைத்திருந்தார். ஜனங்கள் அளவிறந்த உற்சாகங்காட்ட லார்டு கர்ஸன் படகிலேறி ராஜ தம்பதிகள் வந்த நீராவி மரக்கலத்துக்கருகே சென்று அவரை எதிர் கொண்டழைத்தார். பின்னர் எல்லோருமாகக் கரையில் வந்திறங்கியதும் இடார் மகாராஜாவான ஸர் பிரதாப்ஸிங் தமது ராஜ விசுவாசம் இத்தன்மையதென்றும், தமக்கு எவ்வளவு தூரம் பிரிடிஷ் ஏகாதிபத்தியத்தில் நல்லெண்ண முண்டென்றும காட்டுமாறு உருவிய தம் கைவாளை வேல்ஸ் இளவரசரின் பாதத்தின் கீழும் இளவரசியின் பாதத்தின் கீழும் வைத்து எடுத்துக் கொண்டதாகத் தெரிகிறது. பிறகு பம்பாய் முனிசி பாலிடியாருக்காகப் புவியெலாம் புகழ்பெற்ற ஸர் பி. எம். மேடா வந்தனோபசாரப் பத்திரமொன்று வாசித்தார். ஜனங்களின் ஆரவாரிப்பும் குண்டு முழக்கமும் வாத்திய கோஷமும பரிபூரணமாய் அந்நகரத்தில் அமர்ந்திருந்தன. எங்குங் கண்டிரா மகோற்சவங்களாகவே ஒவ்வொன்றும் தென்பட வேண்டுமானல் அவ்வொவ்வொன்றின் மீதும் எத்தனை பணம் செலவிடப் பட்டிருக்கும்? இவைகளனைத்தையுங் கண்டு மனம் பூரித்தவராய் இளவரசர் தம்மையும் தம் மனைவியாரையும் உபசரிக்க வேண்டிச் செய்யப்பட்டிருக்கும் காரியங்களையெல்லாம் பார்க்கும்போது தம் மனத்திற் பதிந்திருந்தவற்றை ஒருவாறு யெடுத்துரைத்தார்.

### பரம்பரையாயுள்ள வழக்கம்.

பம்பாய் முனிசிபாலிடியார் தம்மை நல்வரவு கூறி அழைத்தபோது குறிப்பிட்ட இனிய வசனங்களைத்தாம் கேட்டதும் தம்மனமானது இளகி விட்டதாகவும், உண்மையிலேயே இந்திய நாட்டில் முதனிமுதலாக காலடி வைத்த இளவரசி தான் தானென்ற தம்மிளவரசியார் பெருமை பாராட்டுவதாகவும், அன்றைக்கு 30வருஷங்களுக்கு முன்பாக தம் அருமைத் தகப்பனர் மாட்சிமை தங்கிய எட்வர்டு சக்கிரவர்த்தி தாம் அப்போது நின்றவிடத்திற்கருகாயிருந்து இந்தியாவைப் பார்க்கவேண்டுமென்ற பேராவலினல் தூண்டப்பட்டதை யொப்ப தாமும் தம் அரசியும் நிலவளம், நீர்வளம் முதலான அறுவகை வளங்களும் பொருந்திய இந்நாட்டைப் பார்த்தானந்திக்க வேண்டுமென்று கனவு கொண்டிருந்ததாகவும், அக்கனவு பம்பாய் வாசிகளால் நிறைவேறி விட்டதற்காகத் தாம் அவர்களுக்கு மனமுவந்து வந்தனமளிப்பதோடு முன்னோர் காலத்திலேற்படுத்தப்பட்ட வழக்கமே பரம்பரையாய் அனுசரிக்கப்பட்டு வருவதாகவுங் கூறினர்.

### இந்தியாவிடத் தன்பு.

எட்வர்டு சக்கிரவர்த்தி இந்தியாவுக்கு வந்தது முதல் அவர் மனதில் இந்நாட்டின் மீதும் இதனில் வசிக்கும் 30கோடி ஜனங்களின் மீதும் எவ்வளவு அன்பு உண்டாயிருக்கிறதோ அதற்குச் சிறிதளவும் தம்மிடம் குறைந்து போகவில்லை யென்றும், இத்தேசத்துப் பலபாகங்களிலும் சுற்றுப்பிரயாணஞ் செய்கையில் இளவரசியும் தாமும் இந்திய ஜனசமூகத்தவரது ஒற்றுமை யுணர்ச்சியையும் உள்ளன்பையும் பெறுமிடத்து, இத்தேசத்திற்குத்தாம் சுற்றுப் பிரயாணம் வரும்படியாக நேர்ந்த பாக்கியததைக் காட்டிலும் ஓர் பெரும் பாக்கியம் படைத்தவராவோமென்றும் கூறினர். பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளைப் பார்ப்பதற்காக 4-வருஷங்களுங்குமுன் இளவரசர் புறப்பட்டு அவ்விடங்களை யெல்லாம் பார்த்துவிட்டுக் கடைசியாய் இவ்விந்திய நாட்டுக்கு வந்தார்கள். அவர்கள் அவ்வழகு பொருந்திய நகரத்திற்கு அன்னியரும் புதியோருமானலும் பம்பாய் நகரத்தாரையும் அவர்கள் விவகாரப் பயிற்சியில் மேம்பட்டிருப்பதையும் பன்முறைகளிற் படித்திருப்பதனல் அவருக்கு நம்மவர் பாலுள்ள அன்புக்குக் குறைவொன்றும் ஏற்படவில்லை. பம்பாய் நகரத்துச் கட்டிடங்களின் அழகும் அதன் இயற்கையமைப்பால் உற்பவிக்கும் சௌகரியங்களும் ஒருபுறமிருக்க அப்பட்டணம் வர்த்தகவசதி, சுகாதாரவசதி ஆகிய இவைகளில் நோக்கஞ் செலுத்தியிருக்கிறது. மிக்க

ரமணீயமும் மனத்தைக் கவருவதுமான நகரமென்று இப்பம்பாயைக் கூறுதற்கியலுமென்று இளவரசர் விசேஷமாயெடுத்துப் பேசிப் பின்னர் விசாலம் பொருந்திய வீதிகளை எப்படி அமைக்கலாமென்றும் தொழிலாளிகள் வசிக்குமிடங்களையும் தொழிற்கூட்டங்களையும் எப்படி அமைக்கலாமென்றும் ஆலோசித்துவரும் அபிமானிகளுக்குத் தெய்வம் அனுக்கிரகம் செய்யுமென்று தாம் நம்புவதாகவும், தம் தகப்பனாரிடத்திலிருந்தும் காலஞ்சென்ற விக்டோரியா சக்கிரவர்த்தியினிடத்திருந்தும் இந்தியாவிடத்தும் இந்தியர்களிடத்தும் ஆதரவு காட்டவேண்டுமென்பதைத்தாம் பரம்பரைவழக்கமாகப் பெற்றிருப்பதாகவும், தம்மிளம்பருவமுதல் இந்தியாவென்று கூறும்போதெல்லாம் அன்பு, ஆணவம், ராஜவிசுவாசம் முதலியனவற்றைக் கூடவே தந்தும் மனத்தில் படனம்பண்ணி வருவதற்குகந்தபடி தமதெண்ணங்கள் இன்னுஞ்சில மாதங்களுக்குள் அனுபவசித்தமாகப் பிரதிபலிக்கு மென்பதாகவும் சொல்லி முடித்தார். சக்கிரவர்த்தியாரிடத்தும் அவர் ஆட்சிபிடத்தும் மிகுந்த விசுவாசத்துடன் பக்தி வைத்திருக்கும் இந்திய ஜனங்களைப் பற்றித் தம் தகப்பனருக்குத் தெரிவிப்பதாக இறுதியில் தெரிவித்தார்.

பின்னர் வேல்ஸ் இளவரசர் பிரிடிஷ் ராணுவத்துருப்புகளும் இந்திய ராணுவத்துருப்புகளும் புடைசூழ்ந்து செல்ல ராஜாங்க வண்டியிலேறி ராம்பார்ட் ரோட், ஹாரன்பிரோட், கார்னக்ரோட், கால்பாதேவிரோட், பெண்டிபஜார், பாரீல்ரோட், கிராண்ரோட், வால்கேஷ்வர்ரோட், மலபார்ஹில் ஆகிய இவ்வழியாக ஊர்கோலமாகச் செல்லுகையில் வீதிகளின் இருபுறத்தும் கூடியிருந்த ஜனங்களெல்லோரும் 'ராஜா விஜயம் சுபசூசனே' என்று கைகொட்டிச் சந்தோஷ சாகரத்தில் ஆழ்ந்தவாறிருந்தனர்.

வேல்ஸ் இளவரசர் சென்ற ஒவ்வோரிடத்திலும் அவர் பேசியதை நாம் விஸ்தரிக்குமிடத்து வளர்ந்து போமாதலின் முக்கியமாயுள்ள விஷயங்களைமட்டுங் குறிப்பிட்டு நிறுத்துவோம்.

அடுத்த நாள் மாலை $4\frac{1}{2}$ மணிக்கு வேல்ஸ் இளவரசரும் இளவரசியும் ராஜாங்கவண்டியிலேறி இளவரசியின் ஞாபகார்த்தமாய் அவர் பேரிட்ட ஓர் வீதியைத் திறக்கவேண்டுமென்று நகரச்சீர்திருத்த டிரஸ்டின் சேர்மனை மிஸ்டர் டன் கேட்டுக்கொண்டபடி இளவரசியார் வண்டிக்கருகில் தொங்கிக்கொண்டிருந்த கயிறொன்றைப் பிடித்திழுக்க 'இளவரசி வீதி' என்று எழுதிச் சுவரில் அடிக்கப்பட்டிருந்த பலகையை மூடிய துணியானது நகர்ந்தது. உடனே 'இளவரசி வீதி என்ற பெயரும் தென்பட்டது. அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுராஜ தம்பதிகள் சந்தையண்டை வந்ததும் அங்குக் கூடியிருந்த பார்ஸீமடந்தையரும ஐரோபிய மாதர்களும் ஒன்றுகச்சேர்ந்து தம்பதிகளை வாழ்த்தி மங்களம் பாடினார்கள். அன்றிரவு 8-மணிக்குக் கவர்ன்மெண்டு ஹௌஸின் கண் ஒருல்லாசக் கச்சேரி நடந்தது. அப்போது முக்கிய ஸிவில் ஆபிசர்களும் மிலிடெரி ஆபீசர்களும் இளவரசருக்கு அறிமுகஞ் செய்விக்கப்பட்டார்கள் ஒரு மணிநேரத்துக்குப்பிற்பாடு கோஷாக்கூட்ட (Purdah Party) மொன்றுகூடியது. பரபுருஷரைப் பார்த்தால் பாபமனுகுமென்று உச்சிமுதல் உள்ளங்கால் பரியந்தம் மூடிபோட்டுவந்த கோஷாஸ்திரீகளனேகர் கவர்ன்மெண்டு ஹௌஸுக்கு விஜயம் செய்திருந்தார்கள். இடமும் சமயத்துக்கேற்றபடி வெகு மனோகரமாய் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

## முத்து மழை.

பொன்மாரி பொழிந்ததென்று புராணாதி கிரந்தங்களிற் கேட்டிருக்கிறோமேயன்றி மற்றெங்குங் கேட்டதில்லை ஆனால் இளவரசரும் இளவரசியாரும் இந்தியாவுக்கு வந்திருக்கும் இச்சமயத்தில் பொன்மாரி பொழியாவிடினும் முத்து மழை பொழிந்ததாகக் கேட்கிறோம். சனிக்கிழமையன்று வேல்ஸ் இளவரசர் பம்பாய்த் துறை முகத்துககுச் சென்றிருந்தபோது இளவரசியார் டௌன் ஹாலுக்குச் செல்லவும் அங்கு அனேகமாதர்கள் நல்லுடையுடுத்து நற்சாந்திட்டு பார்த்தோர் மனது பிரமிக்கும்படிகாத்திருந்தார்கள். டௌன் ஹாலும் வெகு ரமணீயமாய்த் தோரணங்களாலும் படங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. இந்து மாதர்களும் பார்ஸி மாதர்களும் மகமதிய மாதர்களும் ஒன்றுசேர்ந்து இளவரசியாருக்கு ஹாரத்தியெடுத்துத் திருஷ்டிகழித்தார்கள். ஒவ்வொன்றையும் வெகு கவனத்துடன் பார்த்த இளவரசியார் இந்திய மாதர்களின் தேச வழக்க பழக்கங்களைத் தாம் நேரிற் கண்டது தமக்கு மிக்க சந்தோஷத்தை உண்டுபண்ணுகிறதாகவும், இந்தியமாதர்களைத்தாம் பார்த்துச் சந்தோஷிக்கவேண்டுமென்று கொண்டிருந்த நல்லெண்ணமானது இப்போது பூர்த்தியானதாகவும், தாம் ஜன்மதேசம் போயினும் இது எந்நாளும் தம்மனத்தை விட்டகலாதென்பதாகவும் பதிலுரைத்து ஹாலை விட்டு வெளிவர நினைத்துப் படிக்கட்டியில் இறங்குகையில் பம்பாய் நகரத்தில் மிகுந்த பணம் பெருத்த தனவந்த வமிசத்தைச் சேர்ந்த மிஸஸ் கபூர்சந்து எனும் மார்வாடிஜாதிப்பெருமாட்டியொருத்தி ஒரு வெள்ளித்தட்டு நிரம்ப நல்முத்துகளைக் கொண்டுவந்து இளவரசியார் ஒவ்வொரு படியாய் இறங்கும்போ தெல்லாம் முத்துக்களைக் கைகையாய் வாரித்தெள்ளினள் என்றால் இதனை 'முத்து மழை' என்றுசொல்லாது மற்றென் சொல்வது? இந்திய மாதாகளின் மனவுல்லாசத்தையும் ராஜவிசுவாசத்தையுங்கண்டு இளவரசி மனமகிழ்ந்தனள்.

## ஜெயபுரம் முதலான இடங்கள்.

பம்பாயை விட்டுப் புறப்பட்ட ராஜ தம்பதிகள் மத்தியிலுள்ள இரண்டோரிடங்களில் தங்கி ஜயபுரம் வந்து சேர்ந்தார்கள் தம்பதிகள் வருவதன் முன்பாகவே ஜெயபுரம் மகாராஜாவும், அவருடைய மந்திரியும் சர்தார்களும் மற்றும் பலரும் ஸ்டேஷனில் காத்திருந்து விமரிசையாக அவர்களை நல்வரவு கொண்டாடி யழைத்தார்கள்.

அங்கிருந்து வேல்ஸ் இளவரசர் சென்ற ஒவ்வோரூரிலும் நடந்த விமரிசைகளைச் சொல்லப் புகின் பெருகுமாதலின் மொத்தமாய் அவர் லாகூர் பெஷாவர், கைபர் கணவாய், பிகானிர், ராவல் பிண்டி, குவாலியர், ஆக்ரா, கல்கட்டா முதலான பெருத்த பட்டணங்களைப் பார்த்துவிட்டு இம்மாதம் 24௳ இச்சென்னை மாநகருக்கு வந்து சேருகிறார் என்று மட்டும் கூறுவோம். பம்பாயில் இளவரசருக்கு எவ்வெவ்விதமாய் உபசாரணைகள் செய்யப்பட்டனவோ அவ்விதமாகவே சென்னையிலும் நடைபெறும்; இந்நகரெங்கும் மிக்க கோலாகலமாயிருக்கும். கவர்ன்மெண்டு ஹௌஸுக்கடுத்த ஐலெண்டில் பல வேடிக்கைகள் நடக்கும். ராஜதம்பதிகளை சென்னையில் வரவேற்று உபசரிக்க ஏற்பட்டிருக்கும் கமிட்டியார், அடியிற் குறிப்பிட்டிருக்கும் சிற்றரசர்களும் ஜெமீன்தார்களும அச்சமயம் ‘சென்னைக்குவந்து ராஜதம்பதிகளை பேட்டிகண்டுகொள்ளும்படியாக அவர்களுக்கு மரியாதைக் கடிதம் எழுதியிருக்கிறார்கள்.

**சிற்றரசர்கள்.**—திருவாங்கூர் மகாராஜா, கொச்சின் ராஜா, புதுக்கோட்டை ராஜா, பங்கனபள்ளி நவாப், சேந்தூர் ராஜா.

**ஜெமீன்தார்கள்.**—ஆர்க்காட் பிரின்ஸ், ஜேயப்பூர் மகாராஜா, பொபிலி மகாராஜா, விஜயநகரம் ராஜா, வெங்கடகிரி ராஜா, காளாஸ்திரி ராஜா, தத்தாபுரம் ராஜா, கார்வெட்நகரம் ராஜா, இராமநாதபுரம் ராஜா, கள்ளிக்கோட்டை ஜாமோரின், கள்ளிக்கோட்டை இளவரசர், சிரக்கால்வள்ளிய ராஜா, காடட்ட நாடுவள்ளிய ராஜா, பாலக்காடு பள்ளிய ராஜா, வள்ளுவநாடு வள்ளியராஜா, வடவள்ளூர் ராஜா, கள்ளிக்கோடு ஆத்தகாடு ராஜா, கொல்லகோடு ராஜா, வாசுதேவ ராஜா, அணல்குடி ராஜா, சிவகங்கை ஜெமீன்தார், உடையார் பாளையம் ஜெமீன்தார், புங்கனூர் ஜெமீன்தார், கனல்குடி ஜெமீன்தார், உரூர் ஜெமீன்தார், தேவகோட்டை ஜெமீன்தார், தென்வள்ளூர் ஜெமீன்தார், எட்டியாபுரம் ஜெமீன்தார், கருப்பம் ஜெமீன்தார், பத்ராஜலம் ஜெமீன்தார், பார்லக்கிமாதி ஜெமீன்தார், பெத்தக்கிமிதி ஜெமீன்தார், தாரக்கோட்டை ஜெமீன்தார், ராஜா சர் சவலை ராமசாமி முதலியார்.

ல. **அனந்தையர்.**

## சென்னைக்கு விஜயம்.

மேன்மை தங்கிய வேல்ஸ் இளவரசரும் இளவரசியும் இரங்கூனிலிருந்து “Renown” என்னும் அவர்களுடைய கப்பலில் சென்னைக்கு வருவார்கள். ஜனவரி௴ 24௳ புதன்கிழமை காலமே வருவார்களென்றெதிர்பார்க்கப்படுகிறது. காலை $5\frac{1}{2}$ அல்லது 6–மணிக்கு கப்பல் தென்படும். சுமார் 7-மணிக்கு கப்பல் துறைமுகத்தில் வந்து நிற்கும். அப்பொழுது இராஜமரியாதைச் சின்னமாக 31 குண்டுகள் போடப்படும். காலை $8\frac{1}{2}$ மணிக்கு கப்பலை விட்டிறங்குவார்கள். கனம் பொருந்திய கவர்னரும் அவர் பெருமாட்டியும் கப்பலிற்சென்று இளவரசர் இளவரசியிவர்களை யெதிர்கொண்டழைத்துபசரிப்பார்கள். புதிதாய்க் கட்டிய (Pier) துறைமுக வாராவதியில் அவர்கள் வந்திறங்கியதும் கரையில் போடப்பட்டிருக்கும் பந்தலின்கீழ் கவர்னர் முதலான உத்தியோகஸ்தர்கள் அரசர்கள் சிற்றரசர்கள் ஜமீன்தார்கள் நகரமாக்கள் கூடியவர்களையுபசரித்தழைப்பர். பிறகு அப்பந்தலில் சென்னை முனிசிபல் சங்கத்தார் நல்வரவுகூறி வந்தனோபசாரப் பத்திரம் வாசித்தளிப்பார்கள். அதைப் பெற்றுக்கொண்டு மறுமொழி கூறியபின் இராஜகோலத்தோடு, பீச்ரோட்டு, எஸ்பளனேட் வழியாகலா–காலேஜ் வரையில் வந்து பிறகு வடக்கே திரும்பி கோட்டையைச் சுற்றிக்கொண்டு மவுண்ட் ரோட்டில் பிரவேசித்து, கவர்ன்மெண்ட் தோட்டவாராவதி தாண்டி சக்கரவர்த்தியார் பதுமை நிற்குமிடத்துக் கெதிரிலுள்ள வாசல் வழியாக கவர்னர் தோட்டத்துக்குள் பிரவேசிப்பார்கள். இளவரசர் இளவரசியும், ஸர்வால்டர் லாரென்ஸும் நாலுகுதிரை கட்டிய இராஜாங்க வண்டியிலேறிச் செல்வார்கள். பிறகு கவர்னரும் அவர் பத்னியாரும் நாலுகுதிரை கட்டிய வண்டியில் வருவார்கள். பிறகு 6-வண்டிகளில் வரிசையாக இளவரசருடைய பரிஜனங்கள் உத்தியோகஸ்தர்கள் வருவார்கள். கடைசி வண்டியில் சென்னை கவர்ன்மெண்டு சீப் செக்ரிடெரியும், ‘ஸ்பெஷல் டியூடி’ பொலிடிகல் ஆபீஸரும் வருவார்கள். பிறகு கவர்னருடைய மெய்க்காவலர் துருப்புகள் செல்லும். இதற்குப்பிறகு திருவாங்கூர் மஹாராஜா முதல் மற்றுமுள்ள அரசர்கள் சிற்றரசர்களும், கௌன்ஸில் மெம்பர்கள் ஹைகோர்ட்டு ஜட்ஜிகளும் மற்ற உத்தியோகஸதர்களும், ஜமீன்தார்களும் அவ்வரசர்கள் அந்தஸ்துக்குத் தகக படி கிரம வரிசையாக ஊர்கோலமாய் வண்டியில் வருவார்கள். இந்த ஊர்கோல வரிசையில் 51-வண்டிகள் கிரம வரிசையாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. சாயங்காலம் 5-மணிக்கு விக்டோரியா டெக்னிகல் இன்ஸ்டிடியூட் ஸ்தாபனசடங்கு நடக்கும். புதன்கிழமை இரவு 9-$\frac{3}{4}$மணிக்கு பாங்குவெட்டிங் ஹாலில் இளவரசர் கொலுவிருந்து பேட்டியளிப்பார். 26௳ வியாழக்கிழமை 11-$\frac{1}{2}$மணிக்கு மேன்மை தங்கிய இளவரசியார் சேப்பாக்கத்திலுள்ள கோஷா ஆஸ்பத்திரியை விஜயம் செய்யவருவார். வேல்ஸ் இளவரசா அன்று பகல் மஹாராஜாக்கள் ராஜாக்கள் முதலானவர்களுக்கு பேட்டிகொடுத்து மறுநாள் பகல் அவர்களில் காணவேண்டியவர்களைக் கண்டுவரப் போவார். வியாழக்கிழமை இரவு $9\frac{1}{2}$-மணிக்கு சென்னைத் தீவில் இவ்விராஜதானிப் பிரமுகர்கள் சேர்ந்து செய்யும் விருந்து வேடிக்கைக்கு இளவரசரும் இளவரசியும் செல்வார்கள். வெள்ளிக்கிழமை சாயங்காலம் இளவரசரும் இளவரசியும் கெண்டிக்குப் போவார்கள். 27-௳ சனிக்கிழமை சாயங்காலம் $3\frac{1}{2}$மணிக்கு கவர்னா தோட்டத்தில் பாங்குவெட்டிங் ஹாலில், சுதேச சீமாட்டிகளுக்கு மட்டுமென்று கூடும் படுதாக் கச்சேரியில் இளவரசியவாகள் அம்பதில் பெருமாட்டியோடுகூட விருந்து பேட்டியளிப்பார்கள். சாயங்காலம் 5-மணிக்கு கவர்னர் தோட்டத்தில் தோட்டக்கச்சேரி நடக்கும். 28-௳ ஞாயிற்றுக்கிழமை காலையில் இளவரசரும் இளவரசியும் ஆலயஞ்சென்று தொழுது அன்றிரவு 9-$\frac{3}{4}$மணிக்கு மைசூருக்குப் பிரயாணமாகப் போவார்கள். போகும்போது ஆடம்பரமொன்றுமிராது. புதன்கிழமை முதல் ஞாயிற்றுக்கிழமை வரையில் ஆபீஸ்கள் மூடப்பட்டிருக்கும்.